# சின்டுவின் விருப்பம்




மைசூர் சாண்டல்
பேபி சோப் சந்தன,
பாதாம் எண்ணெய்களைக்
கொண்டது. அது
சருமத்திற்கு மிகவும்
ஏற்றது.








Almond oil moisturiser and antiseptic soap.



கடந்த 80 ஆண்டுகளாக
சந்தனத்தின் நற்குணத்தை
உங்கள் இல்லத்திற்குக்
கொண்டு வருகிறது
மைசூர் சாண்டல்ச சோப் நிறுவனம்



















Heroes start early.

Ride, race, take a tumble or even take a fall.
Because it's never too early to be a hero.



HERO CYCLES



# ஓர் ஏரியின் பழம்பெருமை

இந்தியா பெருமைப்பட்டுக் கொள்ள ஆசியாவிலேயே மிகப்பெரிய உப்பு ஏரியான சிலிகா ஒரிஸ்ஸா மாநிலத்தில் உள்ளது. மலைகளால் சூழப்பட்டு பல தீவு, திட்டு களைக் கொண்ட பரந்துள்ள இந்த ஏரியின் பரப்பளவு சுமார் 1,100 சதுர கி.மீ. இது கடல் சேர்ந்து மிக அழகாய் காட்சி அளிக்கிறது.

இதன் ஒரு தீவில் காளிஜெய் என்ற தேவதை உள்ளது. இது ஏரியைக் கோலோச் சும் கடவுள். இதை வழிபட்டு தாங்கள் பத் திரமாக இருக்க சுற்றுலாப் பயணிகள் படகு களில் செல்கிறார்கள். ஒருமுறை இத்தேவ தையே விபத்தை எதிர்நோக்க வேண்டியதா யிற்று. அப்போது அதிசய சக்திவாய்ந்த பெண்ணாக இருந்தாள். அவள் சாதாரண வாழ்க்கையை மேற்கொள்ளாது பற்றற்ற முனிவரைப் போல இருந்தாள். இது புரியாத பெற்றோர் அவளது திருமணத்திற்கு ஏற்பாடு செய்தார்கள். அதற்காக அவளைச் சற்றுத் தொலைவிலுள்ள ஒரு கிராமத்திற்கு படகில் கூட்டிக் கொண்டு போனார்கள். படகு செல் லும்போது நடுவழியில் பெரும்புயல் வீசி யது. படகு ஆட்டம் கண்டது. அதில் இருந்த எல்லோரும் பயந்து போனார்கள். ஆனால் காளிஜெய் சற்றும் பயப்படவில்லை.

மழை விடாமல் பெய்தது. கருமேகங்கள் சூழ்ந்து இருட்டியும் விட்டது. திடீரெனப் படகு கவிழ்ந்து அதில் இருந்தவர்கள் கடலில் தூக்கி எறியப்பட்டனர். எல்லோரும் எப் படியோ நீந்திக் கரைக்குப் போய்ச் சேர்ந் தார்கள். ஆனால் காளிஜெய் மட்டும் எங்கு போனாள் என்றே தெரியவில்லை. மக்கள் அவளுடைய ஆவி அந்த ஏரியைச் சுற்றிச் சுற்றி வருவதாக இன்றும் நம்பி வருகிறார்கள். அவள் தங்களைக் காக்கும் கடவுள் என எண்ணி வழிபட்டு வருகிறார்கள்.

---

### வினாக்கள்

1. சிலிகா ஏரியை ஒட்டியுள்ள மூன்று மாவட் டங்கள் யாவை?

   ..................................................

2. காளிஜெய் ஆலயம் எந்தத் தீவில் உள்ளது?

   ..................................................

3. ஒரிஸ்ஸாவில் புகழ்பெற்ற கந்தக வெந்நீர் ஊற்று எங்கே உள்ளது?

   ..................................................

இப்போட்டியில் 14 கீழ் உள்ளவர்களே கலந்து கொள்ளலாம். உங்கள் விடைகளைத் தெளிவாகக் கோடிட்ட இடங்களில் எழுதி கூப்பனை நிரப்பி இந்த முகவரிக்கு ஜனவரி 31, 2003க்குள் அனுப்பவும்.

Orissa Tourism Quiz Contest - 2
Chandamama India Limited,
No.82, Defence Officers' Colony,
Ekkatuthangal, Chennai - 600 097.

பெயர் : .................................................. வயது : ..............................

முகவரி : .................................................. பின்கோடு : ..............................




*One winner picked by Orissa Tourism in each contest will be eligible for 3 days, 2-night stay at any of the OTDC Panthanivas, upto a maximum of four members of a family. Only original forms will be entertained. The competition is not open to CIL and Orissa Tourism employees and their family members. The judges' decision will be final.*
***Orissa Tourism, Paryatan Bhaven, Bhubaneswar-751 014. Ph:(0674)2432177, Fax:(0674) 2430887, e-mail:ortour@sancharnet.in. Website:Orissa-tourism.com***


இந்தியப் புராதனக் கதைகள் 26


நவீன வேதாளக் கதை 19


மர்மக்குளம் 13


விநாயகர் 45



## பொருளடக்கம்




இப்பத்திரிகையில் விளம்பரங்களை வெளியிடத் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

சென்னை
Ph : 044 - 231 3637
234 7399
e-mail : advertisements@chandamama.org

டில்லி
மோனா பாட்டியா
Ph : 011 - 651 5111
656 5513 / 656 5516

மும்பை
ஷகீல் முல்லா
Mobile : 98203 - 02880
Ph : 022 - 266 1599
266 1946 / 265 3057



SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**
***Remittances in favour of Chandamama India Ltd.***
to
Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony,
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail : subscription@chandamama.org



பரிசளிப்புச் சந்தா
இந்தியாவைத் தவிர
மற்ற எல்லா நாடுகளுக்கும்
விமானத் தபால் வாயிலாக
பனிரெண்டு இதழ்களுக்கு ரூ. 900
இந்தியாவிற்குள் ரூ. 120
புக்போஸ்டில்
உங்கள் சந்தாத் தொகையை
டி.டி வாயிலாகவோ
அல்லது மணியார்டரிலோ
சந்தமாமா இந்தியா லிமிடெட் என்ற
பெயரை எழுதி அனுப்பவும்.

நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# தாய்மொழியைக் காப்போம்!

உலகில் 6800 மொழிகள் பேசிப் படித்து எழுதப்படுகின்றன என்று யுனெஸ்கோ நிறுவனம் தன் கணிப்பால் கூறுகிறது. இவற்றில் இந்த நூற்றாண்டின் இறுதிக்குள் 90 சதவீத மொழிகள் மறைந்து போய் விடும். இம்மொழிகளோடு இவற்றைப் பேசுபவர்களின் பண்பாடும் அழிந்துவிடும்.

இந்தியாவில் 30 முக்கிய மொழிகளில் நல்ல இலக்கிய வளர்ச்சி உள்ளது. இவை போக 500 வட்டார மொழிகள் ஆங்காங்கே பயன் படுத்தப்படுகின்றன. குழந்தை தாய்மொழியைத் தன் பெற்றோர் களிடமிருந்து கற்கிறது. மொழி ஒருவரது எண்ணத்தை வெளிப்படுத்தி ஒன்றுபட்டு வாழச் செய்வதோடு பண்பாட்டையும் வளர்க்கிறது. ஒரு மொழி பிற மொழிகளிலிருந்தும் தனக்கு வேண்டியதைப் பெறுகிறது. இந்திய மொழிகளில் பல சொற்கள் பொதுவானவை. இது நாட்டு மக்களை ஒன்றுபட இருக்க உதவுகிறது. அம்புலிமாமாவும் அதன் மொழிப் பதிப்புகளும் இந்தியக் குழந்தைகள் ஒன்றுபட்டு நாட்டிற் குப் பணிபுரிய வேண்டும் என்ற நோக்கத்திலேயே வெளியிடப் படுகின்றன.

தற்போது சிலர் தம் தாய்மொழியை அலட்சியம் செய்வதை ஒரு பெருமை என நினைக்கிறார்கள். இந்தப் போக்கு யுனெஸ்கோ அஞ்சுவது போல தாய்மொழியை மறைந்து போகச் செய்துவிடும். எனவே நாம் நம் தாய்மொழியை பாதுகாத்துப் பேணி வளர்த்து வருவோமாக!

ஆசிரியர் : விஸ்வம்

Visit us at : http://www.chandamama.org



இந்திய மாவீரர்கள் புதிர்ப் போட்டியில் கலந்து கொண்டு
அற்புதமான பரிசுகளை வெல்லுங்கள்

# இந்திய மாவீரர்கள்-16

**நம் நாட்டு வரலாற்றுச் சிறப்புமிக்க வீரர்கள் பற்றிய வினாக்கள் இவை. இவர்களை நீங்கள் அறிவீர்களா?**

**முற்றிலும் சரியான விடைகள் கொண்ட மூன்று கூப்பன்களுக்கு சைக்கிள்கள் பரிசளிக்கப்படும்***



1. நான் குஷாண மன்னர்களில் பெயர் பெற்றவன். புத்தமதத்தைப் பரப்பும் மற்றொரு அசோகர் என்று என்னைக் கூறுவார்கள். நான் யார்?

---

2. நான் காவேரி நதியில் கல்லால் அணை கட்டினேன். என் கால் நெருப்புபட்டுக் கருகி ஒரு புதுப் பெயரைக் கொடுத்தது. நான் யார்?

---

3. மகத சிம்மாசனத்தில் கி.மு.320ல் நான் அமர்ந்தேன். என் சாம்ராஜ்யம் வங்காள விரிகுடாவிலிருந்து அரபிக் கடல்வரை பரவி இருந்தது. என் பெயர் என்ன?

---

4. நான் 'மைசூர் புலி'. மைசூரில் பட்டுத் தொழிலை புகுத்தியவன். போர் ஆயுதங்களில் மைசூர் ராஜ்ஜியத்தை தன் நிறைவு பெறச் செய்த நான் யார்?

---

5. அமிரித்சர் ஹரிமந்திரில் தங்கத் தகடு வேய ஐந்து லட்சம் ரூபாய் 1802ல் அளித்தேன். என் பெயர் என்ன?

---

ஒவ்வொரு வினாவிற்கும் அதன் கீழுள்ள வெற்றிடத்தில் விடையைத் தெளிவாக எழுதவும். இந்த ஐவரில் உங்களுக்கு பிடித்தமான தேசியமாவீரர் யார் என்றும் அதற்கான காரணங்களை பத்து சொற்களில் எழுதவும். எனக்கு மிகவும் பிடித்த புராண மாவீரர் ..........................................

..................................................................

..................................................................

போட்டியாளரின் பெயர்: ..........................................

வயது: .................. வகுப்பு: ..................................

முகவரி: ...........................................................

..................................................................

பின்கோடு: .......................... போன்: ...........................

போட்டியாளரின் கையொப்பம்: ...................................

பெற்றோரின் கையொப்பம்: ........................................

இந்தப் பக்கத்தைக் கத்தரித்துக் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**இந்திய மாவீரர்கள் புதிர்ப்போட்டி-16**
**சந்தமாமா இந்தியா லிமிடெட்**
நெ. 82. டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை-600 097
அனுப்ப வேண்டிய கடைசித் தேதி பிப்ரவரி 5, 2003

இப்பரிசுகளை உங்களுக்கு அளிப்பவர்கள்




**நிபந்தனைகள்:**

1. இப்போட்டி 8 முதல் 14 வயதிற்குட்பட்டவர்களுக்கு மட்டும்.
2. *எல்லா மொழிப்பதிப்புகளின் கூப்பன்களிலிருந்தும் மூன்று பேர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இச்சிறார்களுக்கு அவர்களுக்கு ஏற்ற அளவு சைக்கிள்கள் வழங்கப்படும். முற்றிலும் சரியான விடைகள் கொண்ட பல கூப்பன்கள் இருந்தால், 'எனக்கு மிகவும் பிடித்தமான மாவீரர்' என்ற தலைப்பில் எழுதப்பட்ட வாக்கியங்களில் சிறந்தனவாகத் தேர்ந்தெடுக்கப்படுபவைகளுக்குப் பரிசு அளிக்கப்படும்.
3. நடுவர்களின் தீர்ப்பே இறுதியானது.
4. இப்போட்டி தொடர்பாக எவ்விதக்கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்ளப்படமாட்டாது.
5. வெற்றிபெற்றவர்களுக்குத் தபால் வாயிலாக முடிவுகள் தெரிவிக்கப்படும்.




கீழ்க்கண்ட சிறுவர், சிறுமியர் அம்புலிமாமா (சந்தமாமா) ஹீரோ சைக்கிள் புதிர் போட்டியில் வெற்றி பெற்று, ஒவ்வொருவரும் பரிசாக ஒரு ஹீரோ சைக்கிளைப் பெற்றிருக்கிறார்கள்.

*ஏப்ரல் 2002*
அபிஷேக், சென்னை
வி. அஷுதோஷ், மும்பை
பி. அனு, குண்டூர்

*மே 2002*
மிஸ். வீராபென், அமரேலி
ராஜுகர்மார்கர், பாங்குரா
சோனம் நாகர், உஜ்ஜயின்

*ஜுன் 2002*
அதுலா, கோயமுத்தூர்
ஆஷ்ரய் தேவ்லிகர், மும்பை
கோபர்த்தன் சாஹு, பத்ரக்

*ஜுலை 2002*
பி.ஏ. ரகுநந்தனா, நால்கொண்டா
ஸ்ரீ ராவுல் தாலுக்தார், குவாஹாத்தி
கார்த்திக் சர்மா, கோட்டயம்

*ஆகஸ்ட் 2002*
திப்திமென் பேஹேரா, புவனேஸ்வர்
கிதிஷ் பிஷ்வால், கோல்கத்தா
நிர்மன் பது, கட்டக்

*செப்டம்பர் 2002*
ஆகாஷ் தர்ஷ் பாரீக், மும்பை
ஆனந்த் ராமா கராவத், கோவா
கணேஷ் கே.ஜே., கர்நாடகா

# சங்கராந்தி - சூரிய பகவான்

தென்னிந்தியாவில் ஆந்திரா, கர்நாடகம், தமிழ்நாடு ஆகிய மாநிலங்களில் பொங்கல் பண்டிகை சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. இந்தியாவின் மற்ற பகுதிகளில் இது மகர சங்கராந்தி எனக் கூறப்படுகிறது. இந்த நாளில் இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலும் உள்ளவர்கள் சூரிய பகவானை வழிபடுகிறார்கள். அவருக்குப் பல இடங்களில் ஆலயங்கள் நிர்மாணிக்கப்பட்டுள்ளன. அவற்றில் ஏழு ஆலயங்கள் மிக முக்கியமானவையாகக் கருதப்படுகின்றன.


Sri Suryanayana Moorthy

ஒரிஸ்ஸா கோனார்க் ஆலயம், அரசவில்லி சூரியநாராயண சுவாமி ஆலயம் குஜராத் மோதேரா சூரிய ஆலயம், பிரம்மண்ய தேவ ஆலயம், சூரிய பஹார் ஆலயம், கயாவிலுள்ள தட்சிணார்க்க ஆலயம், தமிழ்நாட்டில் சூரியனார் கோயில் என்பன அவை.

## இந்தியாவில் அறிந்திராத இடங்கள்

# சிமிலிபால்



பெரும் காடுகளில் பல்வித தூரங்களையும் தாவரங் களையும் பறவைகளின் இன்குரல்களையும் பார்த்தும் கேட்டும் ரசிக்க வேண்டுமென்றால் ஒரிஸ்ஸாவிலுள்ள சிமிலிபால் ரிசர்வ் காட்டிற்குச் செல்லுங்கள்.

சிமிலிபால் 900 மீட்டர் உயரத்தில் பீடபூமிப் பிரதேசத் தில் உள்ளது. 2750 சதுர கி.மீ. பரப்பளவில் இந்தக் காடு பரவியுள்ளது. மலைச் சரிவில் பரந்து கிடக்கும் இந்தக் காட்டில் இடத்திற்கு இடம் தட்பவெப்ப நிலை மாறுவ தால் சில இடங்களில் மழையும், சில இடங்கள் வறண்டுள்ளதையும் காண லாம். எனவே இடத்திற்கு இடம் மாறுபட்ட தாவரங்களைக் காண முடிகிறது.

இங்கு தாவரங்கள், பறவைகள், மிருகங்கள் என்றெல்லாம் பலவிதங்களில் உள்ளன. 'டைகர் ப்ராஜக்ட்' எனப்படும் புலிகளைப் பாதுகாக்கும் திட்டமும் இங்கு நடைமுறையில் உள்ளது. 1076 விதத் தாவரங்கள், 87 வித தோட்டங்கள், 29 வித பாம்புகள், 231 விதப் பறவைகளும் இங்கு காணக் கிடைக்கின்றன.



கெய்ரிபூரு, மேகாசனி என்னும் அழகிய மலைகளும் புத்தபலங்கா, கெய்ரி, சாலந்தி என்னும் நதிகளும் சிமிலி பாலுக்கு மேலும் அழகை அளிக்கின்றன.

ஜஷிபூர் அருகில் ராம் தீர்த்தாவிலுள்ள முதலைப் பண்ணை சுற்றுலாப் பயணி கள் யாவரும் பார்க்கத்தக்கதே.

## இங்கு எப்படிச் செல்வது?

சிமிலிபாலை புதபடாவிலிருந்தும் ஜஷிபூரிலிருந்தும் போய்ச் சேரலாம். ஜஷிபூரிலிருந்தும் பரிபதா வழியாக 94 கி.மீ. புதபடாவிலிருந்து பரிபதா வழியாக 22 கி.மீ. சிமிலிபாலில் நவம்பர் முதல் தேதியிலிருந்து ஜூன் 15 வரை பொதுமக்கள் போக அனுமதிக்கப்படுவார்கள். இங்கு போக அனுமதியை புதபடாவிலோ அல்லது ஜஷிபூரிலோ பெற வேண்டும்.



# மனமே! இரங்கு!!

குண்டலூர் என்ற சிறு கிராமத்தில் குப்பண்ணன் என்பவன் குதிரை வண்டி ஓட்டிப் பிழைத்து வந்தான். அந்த ஊரில் அவனது வண்டி ஒன்று மட்டுமே வாடகை சவாரிக்கு என்று இருந்ததால் அவன் கேட்கும் அநியாய வாடகையைத் தான் எல்லோரும் கொடுக்க வேண்டியதாயிற்று. அதனால் அவனுக்கு கர்வம் அதிகம்.

ஆனால் இப்படியே வெகுநாட்களுக்கு அவனால் இருக்க முடியவில்லை. அக்கிராமத்தருகே ஓர் ஆலை ஏற்பட்டதால் வேறு இடங்களிலிருந்து பலர் அந்த ஊருக்கு வந்து குடி புகுந்தார்கள். அவர்களில் நாலைந்து பேர்கள் குதிரை வண்டிகளை ஓட்டிப் பிழைப்பவர்கள். அவர்களது வண்டிகள் வாடகைக்குக் கிடைத்ததால் குப்பண்ணனுக்கு வருமானம் குறைந்து போயிற்று. சரியான வருமானம் கிடைக்காமல் சில நாட்களில் அவன் பட்டினியாகக் கூட இருக்க வேண்டியதாயிற்று.

ஒருநாள் அவன் மனநிம்மதியைப் பெற அந்த ஊரின் ஆலயத்திற்குச் சென்றான். அப்போது கோயில் அர்ச்சகர் அங்கு வந்த பக்தர்களிடம் ''எல்லோரும் நல்ல நடத்தையையும் பிறருக்கு இரக்கம் காட்டும் இயல்பையும் கொண்டிருக்க வேண்டும். தான் செய்யும் தொழிலே தெய்வம் என்று மதிக்க வேண்டும். அப்போது தான் வாழ்க்கையில் மனநிம்மதியையும் வெற்றியையும் பெற முடியும்,'' என்று கூறினார்.

குப்பண்ணன் அதைக் கேட்டு அவர் மேலும் என்ன சொல்லப் போகிறார் என்பதை அறிந்து கொள்ள பக்தர்களின் கூட்டத்தில் சேர்ந்து நின்றான். அர்ச்சகரும் ''இப்போது உங்களுக்குக் கரும்புச் சர்க்கரையைப் பிரசாதமாகக் கொடுத்திருக்கிறேன். இதில் கொஞ்சம் எடுத்துத் தரையில் நீங்கள் தூவினால் அது பல சிற்றெறும்புகளுக்கு உணவாகும்.

- கி. அருணா -

இதைப் போல நீங்கள் நேர்மையாகத் தொழில் புரிந்து சம்பாதித்ததில் ஒரு சிறு பகுதியையாவது பசித்திருப் பவர்களுக்கு தானம் செய்தால் அவர் களது பசியும் போகும். உங்களுக்கும் ஒரு நற்செயலைச் செய்தோம் என்ற மனநிம்மதி ஏற்படும்,'' என்று அறிவுரை கூறினார்.

அந்த அறிவுரை குப்பண்ணனின் மனதில் நன்கு பதிந்தது. உடனே ஆலயத்திலிருந்து அவன் வெளியே வந்து அருகிலிருந்த மளிகைக் கடைக்குப் போய் கால் ரூபாய்க்குக் கரும்புச்சர்க்கரை வாங்கினான். அதை எடுத்துக் கொண்டு கோயில் மண் டபத்திற்குப் போய் ஓர் ஓரத்தில் இறைத்துவிட்டு வெளியே வந்தான். அப்போது 'குப்பண்ணா!' என்று யாரோ கூப்பிடவே, அவன் திரும்பிப் பார்த்தான். அவனைக் கூப்பிட்டவர் அவ்வூர் லட்சாதிபதியான லட் சுமணப் பிள்ளை தான். அவரும் ''குப்பண்ணா! என் பனிரெண்டு வயது மகளை அடுத்த ஊரிலிருக்கும் உயர்நிலைப் பள்ளியில் சேர்த் திருக்கிறேன். நீ தினமும் காலையில் உன் வண்டியில் அவளை ஏற்றிக் கொண்டுபோய் அந்தப் பள்ளியில் விட்டுவிட்டு மாலையில் அங்கிருந்து அவளை நம் ஊருக்குக் கொண்டு வந்து என் வீட்டில் விட வேண்டும். இதற்கு உனக்கு மாதம் முந்நூறு ரூபாய் கொடுக்கிறேன். நீ நம் ஊர்க் காரன். நம்பகமானவன். அதனால் தான் வேறு யாருக்கும் இந்த வேலை யைக் கொடுக்காமல் உன்னைத் தேர்ந்து எடுத்தேன்,'' என்றார்.

அதைக் கேட்டு குப்பண்ணன் ஆச்சரியத்தால் எதுவும் பேச முடியா மல் சில விநாடிகள் நின்றுவிட்டான். பிறகு அவன் பணிவுடன், ''ஐயா சொல்கிறபடியே நடக்கிறேன்,'' என்று கூறி வணங்கினான்.

எறும்புகளுக்கு சர்க்கரை தானம் செய்த சில நிமிடங்களிலேயே அதற் கான நற்பலன் கிடைத்தது கண்டு மகிழ்ந்த குப்பண்ணன் 'இனி நான் யாவருக்கும் இரக்கம் காட்டி என் னால் முடிந்ததைக் கொடுப்பேன்,' என எண்ணினான். குப்பண்ணனின் இந்த மாற்றத்தைக் கண்டு ஊரார் மகிழ்ந்தனர்.





# மர்மக் குளம்

## 11

(மர்மக் குளத்தை அடைய சர்ப்பநகனின் உதவி வேண்டும் என்று ஜெயசீலன் நினைத்தான். சர்ப்பநகனோ முதல் வேலையாகத் தன் தம்பியைத் தேடுவதில் முனைந்தான். மனிதக் குரங்கை ஆட்டி வைக்கும் கிருபாணஜித்தனைக் கண்டதும் அவன் அவனைத் துரத்தலானான். உயிருக்குப் பயந்து ஓடிய கிருபாணஜித்தன் மரண மரத்திடம் அகப்பட்டுக் கொண்டான். அப்போது - )

மரண மரத்தின் கிளை ஒன்று கிருபாணஜித்தனின் தலையைப் பற்றி அவனை உயரத் தூக்கியது. அவனது இரு பக்கங்களில் இரு கிளைகள் நீண்டு அவனைப் பிடித்தன. அவனோ அக்கிளைகளிடமிருந்து விடுபட கை கால்களை ஆட்டிய வாறே, ''ஐயோ! காப்பாற்றுங்கள்!'' என்று உரக்கக் கூவினான்.

ஆனால் அவனது கூக்குரலைக் கேட்டும் குள்ளர்களில் எவனும் அவனுக்கு உதவ முயலவில்லை. ஏனெனில் அவர்களுக்கு மரண மரத்தை அணுகவே மிகவும் பயம். சர்ப்பஸ்வரனின் குதிரையை மட்டும் தப்பி ஓட முடியாதபடி அவர்கள் இறுகப் பிடித்துக் கொண்டு இருந்தார்கள்.

சற்று தூரத்தில் ஒரு மேட்டில் நின்று பார்த்துக் கொண்டிருந்த ஜெயசீலனும் சித்தசாதகனும் கிருபாணஜித்தனின் அலறல் கேட்டு ஓடி



அவன் ஏறி வந்த குதிரை பயந்து ஓடலாயிற்று.

அப்போது சித்தசாதகன் ஓடிப் போய் சர்ப்பநகனின் கால்களை இறுகப் பிடித்து மரண மரத்திலிருந்து இழுக்கலானான். ஜெயசீலன் தன் வாளால் சர்ப்பநகனைப் பிடித்திருந்த கிளையை வெட்டினான். கிளை யிலிருந்து விடுபட்ட சர்ப்பநகன் கீழே விழும்போது சித்தசாதகன் அவனைத் தாங்கிப் பிடித்துக் கொண்டான்.

அப்போது சர்ப்பநகன் ''மர்மக் குள மகேஸ்வரன் என்னைக் காப் பாற்றிவிட்டான்,'' என்று மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்கக் கூறினான். சித்த சாதகனோ, ''அதெல்லாம் ஒன்றும் இல்லை. உன்னைக் காப்பாற்றியது நாங்கள் இருவரும் தான்,'' என்றான்.

சர்ப்பநகன் தலை நிமிர்ந்து பார்த் தான். மரண மரத்தின் கிளையில் அகப்பட்டிருந்த கிருபாணஜித்த னைக் கண்டு அவன் ''அதோ அங்கே தொங்குபவன் தான் என் தம்பி இருக்கும் இடத்தை அறிந்தவன். அவனை எப்படியும் காப்பாற்றியே தீர வேண்டும்,'' எனக் கூறியவாறே மரத்தின் பக்கம் போக முயன்றான்.

ஜெயசீலன் அவனைப் பிடித்து நிறுத்தி அங்கிருந்த குள்ளர்களிடம் ''எங்கே உங்கள் படைத் தலைவன்? இவனது மூளை குழம்பிவிட்டது. இவனைப் பிடித்துக் கொண்டுபோய் நதியில் அரைமணி நேரம் முக்கி முக்கி எடுத்தால் சரியாகிவிடும்,'' என்றான்.

வந்தார்கள். அதே சமயம் சர்ப்ப நகனும் அங்கு வந்தான்.

அவன் ''ஆ! என் தம்பி எங்கே இருக்கிறான் என்று கூறக் கூடியவன் இவன் ஒருவன் தான். மரண மரம் இவனைக் கொன்று விட்டால் எது வுமே தெரியாமல் போய்விடுமே. அதனால் இவனைக் காப்பாற்று கிறேன்,'' எனக் கூறித் தன் இடை வாளை உருவி கிருபாணஜித்தனைப் பற்றி இருந்த மரக்கிளை ஒன்றன் மீது ஓங்கி அடித்தான்.

அந்த அடிபட்டதும் அந்த மரம் புயலால் தாக்கப்பட்டது போல பயங்கரமாக ஆடியது. அப்போது அந்த மரம் மெதுவாக முனகியது போல இருந்தது. அதன் ஒரு கிளை சட்டெனத் தாழ்ந்து சர்ப்பநகனைப் பற்றிக் கொண்டது.

அவனோ ''மர்மக்குள மகேஸ் வரா! காப்பாற்று!!'' எனக் கதறினான்.

குள்ளர்களின் படைத் தலைவனும் தன் ஆட்களுடன் வந்து சர்ப்பநகனைப் பிடித்துக் கொண்டனர். சர்ப்பநகனோ, ''என் மூளை ஒன்றும் குழம்பிப் போய்விடவில்லை. எல்லாம் சரியாகத் தான் இருக்கிறது. நீங்கள் குள்ளர்கள். இவன் ஜெயசீலன். அவன் சித்தசாதகன். அது முதலைகளின் ஆறு. இப்போதாவது நான் தெளிவாக இருக்கிறேன் என்பது தெரிகிறதா?'' என்று கேட்டான்.

குள்ளர் படைத் தலைவனோ ''அடே! வாயை மூடு. உன்னை ஆற்றில் முதலைகளுக்கு இரையாகப் போடவே போகிறோம்,'' எனக் கூறி அவனைப் பிடித்து இழுத்துக் கொண்டு போனான்.

அப்போது குள்ளர்களின் ராணி தேரில் அமர்ந்து அங்கு வந்தாள். அவளுக்குப் பின் அவளது ஆட்களும் வந்தனர். ஜெயசீலன் ராணியைக் கண்டதும் ''உங்களுக்கு துரோகம் செய்ய முயன்ற கிருபாணஜித்தனை மரண மரம் கொன்றுவிட்டது. இனி நீங்கள் கவலைப்பட வேண்டாம். நாங்கள் எங்கள் வழியில் செல்கிறோம். ஆனால் போகுமுன் இந்த மரத்தைத் எரிக்கப் போகிறோம்,'' என்றான்.

ராணியும் ''ஆகா! அப்படியே செய்யுங்கள். இது ஒரு நல்ல செயலாகும். இந்தக் கிருபாணஜித்தன் ஒழிந்து போனாலும் அந்த மனிதக் குரங்கு தப்பிவிட்டதே!'' என்றாள் கவலைப்பட்டவாறே.

அப்போது ஜெயசீலன் ''சர்ப்பநகன் என்று ஒருவன் எங்களிடம் அகப்பட்டிருக்கிறான். அவனது தம்பியை அந்த மனிதக் குரங்கு தூக்கிக் கொண்டுபோய்விட்டது. எங்களுக்கு இந்த சர்ப்பநகனின் உதவி தேவைப்படுவதால் நாங்களும் அவனோடு சேர்ந்து அவனது தம்பியைத் தேடப் போகிறோம். அப்போது அந்த மனிதக் குரங்கு கிடைத்தால் அதைக் கொன்றுவிடுகிறோம்,'' என்றான்.



சித்தசாதகனும் ''அது பிறகு நடக்க வேண்டிய வேலை. இப்போது உடனடியாக நாம் செய்ய வேண்டிய வேலை இந்த மரண மரத்தை எரிப்பதுதான். உடனே தீவட்டிகளைக் கொண்டு வாருங்கள்,'' என்றான்.

குள்ளர்களில் நால்வர் தீவட்டிகளைக் கொண்டு வந்தார்கள். சித்தசாதகன் ஒரு தீவட்டியை வாங்கிக் கொண்டு ''இது மனிதர்களைப் பிடித்துக் கொல்வதால் இதன் அமைப்பும்



தெய்வீக மரத்தின் அர்ச்சகன். இதற்கு முன் இதை நீங்கள் வாளால் தாக்கியபோது மெதுவாக முனகியவன் நானே!'' என்றான்.

அதுகேட்டு ஜெயசீலன் ஏளனமாகச் சிரித்து ''ஓஹோ! நீதான் மரத்தின் பின்னால் மறைந்திருந்து முனகியவனா?'' என்று கேட்டான். அவனும் சற்றும் பயப்படாமல் ''ஆமாம். நான்தான். ஆனால் அவ்வாறு என்னை முனக வைத்தது நான் வழிபடும் மரண தேவதையே!'' என்றான்.

அப்போது சித்தசாதகன் அவனது தோளின் மீதிருந்த கோடாலியை எடுத்துக் கொண்டு ''அடே குள்ளப் பூசாரி! உன் மரம் எரிந்து சாம்பலாகப் போகிறது. இனிமேல் உனக்கு இந்த வேலை இல்லை. இந்தக் கோடாலி கொண்டு விறகு வெட்டித்தான் பிழைக்க வேண்டும்,'' எனக் கூறினான்.

பூசாரியோ ''இப்போது அந்தத் தீயை அணைக்கப் போகிறாயா அல்லது உன்னையே நான் தீர்த்துக் கட்டவா?'' என்று உறுமியவாறே அவன் மீது பாய்ந்தான். சித்தசாதகன் அவனைப் பிடித்துத் தள்ளவே அவன் குப்புற விழுந்தான். அவன் மெதுவாக எழுந்து ''ஐயா! கெஞ்சிக் கேட்கிறேன். இதை எரிக்காமல் விட்டு விடுங்கள். இது நல்லவர்களை எதுவும் செய்யாது,'' என்றான்.

ஜெயசீலன் சிரித்துக் கொண்டே ''அப்படியா? நீ நல்லவன் தானே. உன்னை மரத்திடம் தள்ளிவிடு

மனிதனைப் போல எலும்பும் சதைகளும் கொண்டதாக இருக்கும்,'' எனக் கூறி அதை அந்த மரத்தின் மீது எறிந்தான்.

அப்போது மரத்தின் பின்னால் இருந்து ஒருவன் ஓடிவந்து, ''வேண்டாம். உன்னால் இதை எரிக்க முடியாது. இது நீண்டகாலமாக உள்ள மரம்,'' என்று கூறினான்.

ஜெயசீலனும் சித்தசாதகனும் அவனை ஏறஇறங்கப் பார்த்தார்கள். அவன் அங்கிருந்த குள்ளர்களை விட இரண்டு அங்குலம் உயரமாக இருந்தான். அவனது கழுத்தில் பாசி மணி மாலையும் தோளில் ஒரு கோடாலியும் இருந்தன.

சித்தசாதகன் தன் ஈட்டியால் அவனை ஒரு தட்டு தட்டி ''யாரடா நீ? சர்வ சக்தி வாய்ந்த என்னையா நீ தடுக்கிறாய்?'' என்று கேட்டான். வந்த பேர்வழியோ ''நான் இந்த

கிறேன். அது என்ன செய்கிறது என்று பார்க்கலாம்,'' என்று கூறி அவனை மரத்தின் பக்கம் தள்ளப் போனான். அர்ச்சகனோ பயந்து நடுநடுங்கி ''வேண்டாம். அது என்னைப் பிடித்து நசுக்கிக் கொன்றுவிடும்,'' என்று அலறினான்.

சித்தசாதகன் இன்னொரு தீவட்டியை வாங்கி அந்த மரத்தின் மீது வீசவே நெருப்பு மரத்தைச் சுற்றிப் பரவி அதனை எரித்தது. அதோடு சேர்ந்து கிருபாணஜித்தனும் எரிந்து போனான்.

அப்போது ஜெயசீலன் ''இந்த கிருபாணஜித்தனுக்கும் எனக்கும் இடையே தகராறு ஏற்பட்டது. இவனால்தான் அமராவதி நகரத்தைவிட்டு வந்து இப்படி அலைந்து திரிய வேண்டியதாயிற்று. என் ஆருயிர் நண்பன் தேவசர்மனையும் விட்டுப் பிரிய வேண்டி வந்தது. அவன் எங்கே எப்படி இருக்கிறானோ யார் கண்டார்கள்?'' என்று கூறினான்.

சித்தசாதகனும் ''நாம் மர்மக் குளத்தை அடைந்து இரண்யபுர மன்னனின் மகனையும் மகளையும் கண்டுபிடித்துக் கொண்டு போய்ச் சேர்ப்பதற்குள் உன் நண்பனையும் கண்டுபிடித்துவிடலாம்,'' என்று கூறினான்.

ஜெயசீலனும் ''சாதகா! நீ கூறியது போல நடக்கும் என்பதில் சந்தேகமே இல்லை. சர்ப்பநகன் எங்கே?'' என்று கேட்டான். சித்தசாதகனும் ''அதோ அவன் தன் குதிரை மீதேறி அமர்ந்து அந்த மலைப் பகுதியைப் பார்த்து



ஏதோ யோசித்துக் கொண்டிருக்கிறான்,'' என்றான். அப்போது ஜெயசீலன் ''சர்ப்பநகனின் தம்பியின் குதிரை அதோ இருக்கிறது. நாம் அதைப் பயன்படுத்திக் கொள்வோம்,'' என்றான்.

சித்தசாதகனும் ''அதை நீயே பயன்படுத்து. நான் மந்திரசக்தியால் உன் பின்னாலேயே வர முடியும். வழியில் மனிதக் குரங்கைக் கண்டால் அதைப் பிடித்து அடக்கி என் வாகனமாக ஆக்கிக் கொள்கிறேன்,'' என்றான். ஜெயசீலனும் ''உன்னால் அப்படிச் செய்ய முடியும். முதலில் நாம் இங்கிருந்து புறப்படுவோம்,'' என்றான்.

பிறகு குள்ளர்களின் ராணியையும் சேனாதிபதியையும் படைத் தலைவனையும் மற்றவர்களையும் பார்த்து ''உங்கள் எதிரி கிருபாணஜித்தன் ஒழிந்தான். அதனால் உங்களுக்கு

இனி பயம் வேண்டாம். மரண மரமும் எரிந்து போய்விட்டது. இனிமேல் சுகமாக வாழுங்கள். நாங்கள் உங்களிடம் விடைபெற்றுக் கொண்டு எங்கள் வழியில் செல் கிறோம்,'' என்றான். அவர்களும் மகிழ்ச்சி ஆரவாரத்துடன் அவர்கள் இருவரையும் வழி அனுப்பி வைத் தார்கள். ஜெயசீலன் சர்ப்பஸ்வரனின் குதிரை மீது அமர்ந்து முன் செல்ல, சித்தசாதகன் பின்னால் சென்றான்.

அப்போது சர்ப்பநகன் உரத்த குரலில் ''ஜெயசீலா! சாதகா! சற்று நில்லுங்கள். நானும் உங்களோடு சேர்ந்து கொள்கிறேன். என் தம்பி யைத் தேடிக் கண்டுபிடிக்க வேண் டுமே!'' என்று கூவினான்.

ஜெயசீலனோ ''நீ உன் வழியே போ! நாங்கள் எங்கள் வழியில் செல் கிறோம். மர்மக் குளத்தை நாங்களே கண்டுபிடித்து என்ன செய்ய வேண் டுமோ அதைச் செய்வோம்,'' என்றான்.

அதைக் கேட்ட சர்ப்பநகன் எதுவும் பேசாமல் மௌனமாக நின்றான். பிறகு அவர்களோடு சேர்ந்தே அவ னும் சென்றான்.

மூவரும் முன்பு ஜெயசீலன் கண்ட நீர்வீழ்ச்சியை அடைந்தார்கள். அப்போது சர்ப்பநகன் அவர்களுக்கு சற்றுத் தொலைவிலுள்ள ஒரு மலைக் குகையைச் சுட்டிக்காட்டி ''அந்த குகையிலிருந்து ஒரு பிராணி எட்டி எட்டிப் பார்க்கிறதே! பார்க்க அது பயங்கரமாக உள்ளதே, அது எப்படி இங்கே வந்தது? ஒரு வேளை அது கிருபாணஜித்தனின் மனிதக் குரங்காக இருக்குமோ?'' என்று கேட்டான்.

ஜெயசீலனும் அதைப் பார்த்து விட்டு ''ஆமாம். அந்த மனிதக் குரங்குதான். சந்தேகமே இல்லை,'' என்றான்.

மனிதக் குரங்கு குகை வாயிலில் குதித்து ஓடுகையில் மகரகேதுவின் வாகனமான விசித்திர யானை தன் துதிக்கையால் அதைப் பற்றி இழுத் தது. மனிதக் குரங்கால் ஓர் அடி கூட எடுத்து வைக்க முடியவில்லை.

*(தொடரும்)*



நவீன
வேதாளக்
கதை

# ஏற்றவன்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின் அவன் கீழே இறங்கி அதைத் தூக்கி சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்த பயங்கர நடுநிசியில் விடாமல் ஒரு வேலையைச் செய்ய முயல்வதைப் பார்த்தால் நீ முத்துமணி செய்தது போல ஒரு நல்ல முடிவுக்கு வர வேண்டும். அவன் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்!'' என்று கூறிக் கதை சொல்லலாயிற்று.



முத்துப் பட்டணம் என்ற ஊரில் முத்துமணி என்ற பணக்கார வியாபாரி இருந்தான். அவனுக்கு ஏராளமான சொத்து இருந்தது. அவன் மனம் இரங்கும் இயல்பானது. எனவே யார் வந்து உதவி எனக் கேட்டாலும் தாராளமாகப் பணம் கொடுத்து அனுப்புவான்.

இவ்வளவு இருந்தும் மணமாகி பல ஆண்டுகளாகியும் அவனுக்கு ஒரு குழந்தைகூடப் பிறக்கவில்லை. இவ்வளவு பணம் இருந்தும் நமக்குப் பின் இவற்றை அனுபவிக்க ஒரு மகன் இல்லையே என்று அவன் மனைவி வருத்தப்பட்டாள்.

பணக்கார முத்துமணிக்கு வாரிசு என ஒரு மகனும் பிறக்கவில்லை எனக் கண்டு அவனது உறவினர்கள் ஏதேதோ நெருங்கிய சொந்தம் கொண்டாடிக் கொண்டு அவனை மொய்க்கலானார்கள். முத்துமணியும் அவர்களை இன்முகத்துடன் வரவேற்று அவர்கள் கேட்ட உதவிகளைச் செய்து வந்தான்.

இவ்வாறு வந்த உறவினர்களுள் அருணாசலம் என்பவனும் ஒருவன். அவன் தன் மகன் உயர்படிப்பிற்காக வெளியூர் சென்று அங்கு தங்கிப் படிக்க வேண்டும் என்றும் அதற்கு நிறையப் பணம் தேவைப்படுவதால் அதைக் கொடுத்து உதவ வேண்டும் என்றும் வேண்டினான். முத்துமணியும், "ஆகா! உதவுகிறேன். உன் மகன் எனக்கு மகனைப் போலத் தான்," எனச் சொல்லி வைத்தான். அவ்வளவு தான். இது உறவினர்களிடையே பரவியது. முத்துமணி அருணாசலத்தின் மகனை தத்து எடுத்துக் கொள்ளத் தீர்மானித்து விட்டான் என்று உறுதியாக எண்ணி விட்டார்கள்.

ஒருநாள் முத்தும்ணி தன் மனைவியுடன் கோயிலுக்குச் சென்று கொண்டிருந்தான். அப்போது ஒரு சிறுவன் "ஐயா! பசிக்குதே. ஏதாவது தர்மம் செய்யுங்கள்," என்று கெஞ்சினான். முத்துமணியும் அவன் மீது இரக்கப்பட்டு பத்து ரூபாயை எடுத்துக் கொடுத்துவிட்டுச் சென்றான்.

ஒரு வாரம் கழித்து அவன் அதே கோயிலுக்கு வந்தபோது முன்பு அவனிடம் பிச்சை கேட்ட சிறுவன் மலர்கள் நிறைய வைத்துக் கொண்டிருப்பதைக் கண்டான். அச்சிறுவனும் முத்துமணியைக் கண்டதும்

ஓடிவந்து வணங்கி ''ஐயா! நீங்கள் அன்று கொடுத்த பத்து ரூபாய் மிகவும் உதவியுள்ளது. அன்று அதில் கால் ரூபாய்க்கு சாப்பாடு சாப்பிட்டுவிட்டு ஐந்து ரூபாய்க்கு மலர்களை வாங்கி விற்றேன். நல்ல லாபம் கிடைத்தது. அதுமுதல் தினமும் இங்கு மலர்களை விற்றுப் பணம் சம்பாதிக்கிறேன். அதில் ஒரு பகுதியைச் சேமித்து வருகிறேன். அதைக் கொண்டு விரைவில் ஒரு கடை திறந்து தேங்காய், பழம், கற்பூரம், ஊதுவத்தி போன்றவற்றை விற்பேன். தங்களுக்கு நான் என்றென்றும் கடன்பட்டிருக்கிறேன்,'' என்றான்.

முத்துமணியும் அதுகேட்டு மகிழ்ந்து ''பேஷ்! நீ என் மகன் போலத்தான். வியாபாரத்தில் நீ முன்னுக்கு வந்துவிடுவாய். உனக்கு என் ஆசிகள்,'' எனக் கூறினான். அன்றுமுதல் அந்த கோயிலுக்கு வரும்போதெல்லாம் முத்துமணி அவனோடு சற்றுநேரம் பேசிவிட்டுச்செல்வதை வழக்கமாகக் கொண்டான்.

ஒரு நாளிரவு முத்துமணி வெகு நேரம் வரை தூங்காமல் ஏதோ யோசித்துக் கொண்டு இருந்தான். அவனது மனைவியும் என்ன யோசனை என்று கேட்கவே, அவனும் ''நமக்கோ குழந்தை பிறக்கவில்லை. நமக்குப் பின் நம் சொத்துக்களைப் பராமரிக்க ஒருவனைத் தத்து எடுத்துக் கொள்ள நினைக்கிறேன். நல்லவனாயும், தெய்வ பக்தியுடையவனாயும் அவன் இருக்க வேண்டும்,'' என்றான்.



மறுநாள் வழக்கம்போல அவன் கோயிலுக்குச் சென்றான். அப்போது ஓர் இளைஞன் கோயில் மண்டபத்தில் அமர்ந்து தியானத்தில் மூழ்கி இருப்பதை அவன் கண்டான். அன்று முதல் கோயிலுக்குச் சென்றபோது எல்லாம் மண்டபத்தில் அதே இடத்தில் அந்த வாலிபன் அமர்ந்து தியானம் செய்வதைப் பார்த்தான்.

ஒருநாள் அவன் அந்த இளைஞன் தியானம் கலைந்து கண்திறக்கும் வரை காத்திருந்தான். அவன் கண் திறந்ததும் முத்துமணி அவனிடம் ''நீ யாரப்பா? எந்த ஊர்க்காரன்? என்ன வேலை செய்கிறாய்?'' என்று கேட்டான். அவனும் ''நான் ஓர் அநாதை. கடவுளை தியானித்துக் கொண்டிருப்பதுதான் என் வேலை. எனக்குச்



சொந்த ஊர் என்று எதுவும் கிடையாது. என்னைக் கடவுளே ரட்சிக்கிறார்,'' என்றான்.

அதைக் கேட்டு முத்துமணி மகிழ்ந்து போனான். ''ஆகா! இந்த இளைஞன் பக்திமான். நல்லவன் போல இருக்கிறது. இன்னும் சில நாட்கள் இவனை கவனித்துப் பார்க்கலாம். பிறகு ஒரு முடிவுக்கு வருகிறேன்,'' என்று அவன் எண்ணினான். சில நாட்கள் கழிந்தன.

ஒருநாள் அந்த இளைஞன் கண்ணீர் வடிப்பதைக் கண்ட அவன், ''நீ ஏன் வேதனைப்படுகிறாய்? உன் பிரச்சினை என்ன என்று என்னிடம் சொல். நான் தீர்த்து வைக்கிறேன்,'' என்றான். அப்போது அந்த இளைஞன் அவரது கால்களில் விழுந்து ''ஐயா! என்னை மன்னித்துவிடுங்கள்,'' என்று கதறினான்.

முத்துமணியும் ''உன்னை நான் மன்னிக்க வேண்டுமா? ஏன்? எதற்கு?'' என்று கேட்டான். அவனும் ''ஐயா! நீங்கள் நினைக்கிறபடி நான் கடவுள் பக்தன் இல்லை. நான் ஒரு திருடன். ஒருநாள் இரவு திருடுவதற்காக உங்கள் வீட்டிற்குள் நுழைந்தேன். அப்போது உங்கள் மனைவியிடம் நீங்கள் தத்து எடுத்துக் கொள்ளப் போகும் இளைஞன் நல்லவனாயும் தெய்வ பக்தி கொண்டவனாயும் இருக்க வேண்டும் என்று கூறினீர்கள். அதைக் கேட்ட நான் சொத்துக்களை அடைய பக்திமானாக நடித்து உங்கள் மனதைக் கவர்ந்து விடுவது என்று தீர்மானித்துக் கொண்டேன். மறுநாள் முதல் பக்திமான் போல் தியானத்தில் மூழ்கியவனாக நடித்து உங்கள் மனதைக் கவர்ந்தேன். ஆனால் நாளாக ஆக என் கெட்ட எண்ணம் என் மனதைவிட்டு அகன்றது. உண்மையிலேயே எனக்குக் கடவுள் பக்தி வந்துவிட்டது. முன்பு நான் செய்த திருட்டுகளையும் மோசடிகளையும் எண்ணியே கண்ணீர் வடித்து வேதனைப்பட்டுக் கொண்டிருந்தேன்,'' என்றான்.

அதைக்கேட்ட முத்துமணி திகைத்துப் போனார். அப்போது அந்த இளைஞன் ''நீங்கள் தர்மாத்மா. தயாள குணம் படைத்தவர். இப்படிப்பட்ட உங்களை ஏமாற்றி உங்களது சொத்துக்களை நான் அடைய முயல்வது மிகப்பெரிய பாவச் செயலாகும்.

நான் இந்த ஊரையேவிட்டுப் போய் விடுகிறேன்,'' என்றான்.

முத்துமணி கொஞ்ச நேரம் வரை யோசித்தான். பிறகு அவன் அந்த இளைஞனிடம் ''நீ ஒன்றும் இந்த ஊரைவிட்டுப் போக வேண்டாம். உன்னை என் மகனாகத் தத்து எடுத்துக் கொள்ளப் போகிறேன்,'' என்றான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னா! அந்த இளைஞன் தான் ஒரு திருடன் எனக் கூறியும் முத்துமணி அவனையே தன் மகனாக தத்து எடுத்துக் கொண்டது அறிவீனச் செயல்தானே! இவனை விட்டுவிட்டு முத்துமணி முன்பு பணம் கொடுத்துப் படிக்க வைத்த அருணாசலத்தின் மகனை தத்து எடுத்துக் கொண் டிருக்கலாம் அல்லது முத்துமணி தான் கோயிலில் தர்மம் கொடுத்த சிறுவனையாவது தத்து எடுத்துக் கொண்டிருக்கலாமே. ஏனென்றால் அவன் நேர்மையாய் வியாபாரம் செய்யவும் சேமித்து வைக்கும் இயல்பையும் கொண்டவன். இவர்களை விட்டுவிட்டு திருடனாக இருந்த இளைஞனைத் தத்து எடுத்துக் கொண்டது சரியா? எனது இந்த சந்தேகங்களைப் போக்க நீ சரியாக விடை கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்குநூறாகிப் போய் விடும்,'' என்றது.

விக்கிரமனும் ''முத்துமணி திரு டனாக இருந்த இளைஞன் தான் தன் வாரிசாக இருக்க ஏற்றவன் என்று முடிவு செய்தது மிகவும் சரியே. அருணாசலத்தின் மகனைப் படிக்க வைத்து முத்துமணி அவனை அறி வாளியாக ஆக்கினான் என்றால் அதற்குக்காரணம் அந்த மகனை தத்து எடுத்துக் கொள்வதற்கு என்பதல்ல.



பிறருக்கு உதவுவது முத்துமணியின் இயல்பு. அதன்படி அவன் அருணா சலத்தின் மகன் நன்கு படிக்க எல்லா உதவிகளையும் செய்தான். அடுத்து பிச்சை எடுத்துக் கொண்டிருந்த சிறுவன் வியாபாரியாக மாறிவிட்ட தால் அச்சிறுவனுக்குப் பணத்தின் அருமை தெரிந்திருந்தது. அதைச் சம்பாதிக்கும் வழியை அறிந்தவன். சேமித்து வைத்துக் கொள்ள வேண் டும் என்ற எண்ணமும் அச்சிறு வனுக்கு இருந்தது. ஆனால் திரு டனாக இருந்த இளைஞன் இப்படி எல்லாம் இருக்கவில்லை. பெரிய பக்திமானைப் போல நடித்து முத்து மணியை ஏமாற்றி அவனது சொத்து களுக்குத் தானே வாரிசாகிவிட வேண்டும் என்றே முதலில் எண்ணம் கொண்டிருந்தான். ஆனால் அவன் தொடர்ந்து கடவுள் தியானத்தில் மூழ்கி இருந்ததால் அது அவன் மனதில் ஒரு நல்ல மாறுதலையே ஏற்படுத்தியது. அதனால் அவன் தான் முன்பு செய்த இழிவான செயல்களை எண்ணி மனம் வருந்திக் கண்ணீர் வடித்தான். முத்துமணியின் சொத் துக்கு தான் ஆசைப்படவில்லை என்பதைத் தெரிவிக்க அவன் ஊரை விட்டே போய்விடுவதாயும் கூறி னான். அவன் முன்பு திருடனாக இருந்திருந்தாலும் இப்போது மனம் மாறித் திருந்திவிட்டான். நல்ல வனாகவும் கடவுள் பக்தனாகவும் உண்மையிலேயே ஆகிவிட்டான். வால்மீகி முனிவர் ஆரம்ப காலத்தில் வழிப்பறி செய்பவராகத் தானே இருந்தார். பிறகு அவர் நல்லவராக வும் பக்தராகவும் மாறிவிடவில் லையா? அதுபோல அந்த இளைஞ னும் பக்தனாகிவிட்டான். என்றும் நேர்வழியில் செல்வான் என்றும் முத்துமணி உறுதியாக நம்பினான். அதனால் தான் அவனே தன் சொத்து களுக்கு வாரிசாக ஏற்றவன் என முத்துமணி முடிவு செய்தான். இது முற்றிலும் சரியே!'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதி லால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.






## கண்ணாமூச்சி விளையாட்டு!



நிலா பால் போலக் காயும்போது நீங்கள் உங்கள் நண்பர்களைக் கூட்டிக் கொண்டு கண்ணாமூச்சி விளையாட்டை விளையாட லாமே. இது வழக்கமாக ஒருவர் கண்ணை இன்னொருவர் பொத்தி மற்றவர்கள் ஓடி ஒளிந்து கொள்ள அவர்களைக் கண்டுபிடிக் கும் விளையாட்டைப் போல அல்ல. இதில் சிறுவர்கள் இரு கட்சிகளாகப் பிரிக்கப் படுகிறார்கள். ஒரு கட்சி நிழல் பகுதியிலும் மற்ற கட்சி நிலா வெளிச்சத்திலும் இருக்கும். நிழல் பகுதியிலிருந்து யாராவது வெளியே வந்தாலே மற்ற கட்சி அவரைப் பிடிக்க முடியும். அதுபோலத் தான் நிலா வெளிச்சத்தில் உள்ளவர் களில் யாராவது வெளியே வந்தால் எதிர்க்கட்சி பிடிக்க முடியும். அவர்களைத் தம் பகுதிகளிலிருந்து வெளியே வரச் செய்ய ஆசைகள் காட்டப்படும். இதற்கு புள்ளிகளைக் கணக்கிட்டு வெற்றி தோல்வியை முடிவு செய்யலாம்.



## பாதாம் பருப்பு ஒரு நாணயம்!

குஜராத்தில் 17வது நூற்றாண்டில் கசக்கும் பாதாம் பருப்புகள் நாணயங் களாகப் பயன்படுத்தப்பட்டதாம். இவ்வித 60 பாதாம் பருப்புகளின் மதிப்பு ஒரு காசு!

# மழை பெய்விக்கும் முனிவர்



ரிஷ்யசிருங்கர் பிறக்கும்போதே தலையில் கொம்புடன் பிறந்தவர். இவரது தாய் தேவதையானாலும் சாபத்தால் ரிஷ்ய மானாகி இருந்த போது இவரைப் பெற்றெடுத்தாள். அதனால் தான் ரிஷ்யசிருங்கர் (மான் கொம்பு கொண்டவர்) என்ற பெயர் ஏற்பட்டது. இவரை விபாண்டகர் என்ற முனிவர் இவருக்கு வெளி உலகைப் பற்றி எதுவும் தெரிய விடாமல் வளர்த்து வந்தார்.

ரிஷ்யசிருங்கர் காட்டிலுள்ள பற வைகளும் மிருகங்களும் திரிவதை யும் கத்துவதையும் தான் அறிந்தவர். தம் தந்தையைத் தவிர வேறு எந்த ஆணையோ அல்லது பெண் ணையோ பார்த்ததே இல்லை. விபாண்டகர் அவருக்கு எல்லா சாஸ் திரங்களையும் கற்றுக் கொடுத்தார். அவரிடம் ஓர் அபூர்வ சக்தி இருந்தது. மழை பொய்த்துப் போன இடத்திற்கு அவர் போனால் அங்கு நல்ல மழை பெய்யும்.

ஒருமுறை அங்க தேசத்தில் மழை பெய்யாமல் வறட்சி ஏற்பட்டது. அங்க மன்னன் ரோமபாதன் என்ன செய்வது என்று திகைத்தான். அப் போது அமைச்சர்கள் காட்டிலுள்ள ரிஷ்யசிருங்கரின் சக்தி பற்றிக் கூறினார்கள். மன்னனும் உடனே அவரைத் தன் நாட்டிற்கு அழைத்து வரத் தன் அமைச்சர்களை அனுப்பி

- பாரதீயன் -

னான். ஆனால் விபாண்டகரோ அவரைத் தம் ஆசிரமத்திற்கு வெளியே எங்குமே அனுப்ப முடியாது என்று பிடிவாதமாகக் கூறிவிட்டார். அவர்களும் பேசாமல் வந்த வழியே சென்றார்கள்.

ரோமபாதனிடம் அவர்கள் ரிஷ்யசிருங்கரை அழைத்துவர விபாண்டகர் தடையாக இருப்பதைக் கூறினார்கள். அப்போது அமைச்சர்களில் ஒருவர் ''ரிஷ்யசிருங்கர் வெளி உலகைப் பார்த்ததே இல்லை. அதனால் விபாண்டகர் தம் ஆசிரமத்தில் சில நாட்கள் இல்லாத சமயமாகப் பார்த்து அவரை நம் நாட்டிற்கு அழைத்து வந்துவிட வேண்டும். அதற்காக அழகிய பெண்களைச் சுவையான தின்பண்டங்களுடன் அங்கே அனுப்பி அவரை மயக்கி நம் நாட்டிற்கு அழைத்து வந்துவிடலாம். அப்போது நம் நாட்டில் நல்ல மழை பெய்யும்,'' என்றார்.

மன்னனும் ''அப்படியே செய்யலாம்,'' என்றான். இயற்கையோடு ஒட்டி வாழும் ரிஷ்யசிருங்கரை அழைத்துவர அழகிய பெண்கள் தேர்ந்து எடுக்கப்பட்டார்கள். விபாண்டகர் ஏதோ ஒரு யாகத்திற்குப் போயிருக்கிறார் என்றும் அவர் திரும்பிவர சில நாட்கள் ஆகும் என்றும் தெரிந்தது. உடனே ரோமபாதன் அழகிய பெண்களை இனிப்பான தின்பண்டங்களோடு விபாண்டகரின் ஆசிரமத்திற்கு அனுப்பினான். அவர்களும் அங்கு போய் ரிஷ்யசிருங்கரைக் கண்டார்கள்.





"அறிவு என்னும் ஊற்று நம் ஒவ்வொருவரிட்மும் உள்ளது."

"உலகம் முழுவதும் பல வகைகள் ஒன்று சேர்ந்தது. உலகில் இவ்வாறு ஒன்று சேர்ந்ததில் பல வகைகளைக் காணலாம்.

*- சுவாமி விவேகானந்தர்.*

அவர்கள் தாங்களும் தவம் செய்பவர்கள் எனக் கூறி இனிய பாடல்களைப் பாடி ஆடி அவரது மனதைக் கவர்ந்தார்கள். தாம் கொண்டு வந்த இனிப்பு பட்சணங்களைப் புதுவித காய், கனி, கிழங்குகள் எனக் கூறி அவருக்குக் கொடுத்து சாப்பிட வைத்தார்கள்.

ரிஷ்யசிருங்கருக்கு எல்லாமே புதிதாக இருந்தது. அவர்களது தோற்றம் ஆடல் பாடல்கள், அவர்கள் கொடுத்ததின் பண்டங்கள் எல்லாமே அவரது மனதைக் கவர்ந்தன. அவர்கள் அவரைத் தங்களுடைய ஆசிரமத்திற்கு வருமாறு அழைக்கவே, அவரும் அவர்களோடு கிளம்பி விட்டார். அவர்கள் அவரை அங்க நாட்டிற்குக் கொண்டு போய்விட்டார்கள். அவரது காலடி அங்க நாட்டில் பட்டதும் நாடு முழுவதிலும் நல்ல மழை பெய்தது. மன்னன் ரோமபாதனும் அவரை வரவேற்று எல்லா மரியாதைகளையும் செய்து தன் மகள் சாந்தாவை அவருக்குத் திருமணம் செய்து வைத்தான்.

பிற்காலத்தில் தசரதர் புத்திர காமேஷ்டி யாகம் செய்ய ரிஷ்ய சிருங்கரை அழைத்துச் சென்றார். அந்த யாகத்தின் பயனாக இராமன், பரதன், லட்சுமணன், சத்துருக்கனன் என்ற நான்கு புதல்வர்களை அவர் அடைந்தார்.





# போதும், புகழாதே!

ஜெயபுரத்து மன்னன் விஜயேந்திரன். அவன் எப்போதும் தன்னை யாராவது புகழ்ந்து கொண்டே இருக்க வேண்டும் என்று விரும்புபவன். அப்படிப் புகழ்பவனுக்கு அவன் பரிசுகளை அளித்துவிடுவான். அதனால் அரசாங்க ஊழியர்கள் போட்டி போட்டுக் கொண்டு அவனைப் புகழ்ந்து விலையுயர்ந்த பரிசுகளாகப் பெற்றுக் கொண்டே இருந்தார்கள். இது அனுபவமிக்க முதலமைச்சர் வித்தியாதரருக்குச் சற்றும் பிடிக்கவில்லை.

ஒருநாள் அவர் மன்னனிடம், ''உங்களைப் புகழ எவ்வளவோ பேர்கள் முன்வருவது இயல்பே. ஆனால் இந்தப் புகழ்ச்சியைக் கேட்கக் கேட்க உங்களுக்கு 'தான்' என்ற மமதை ஏற்பட்டுவிடும். மமதை அறிவை மழுங்கச் செய்துவிடும். அதனால் உங்களது ஆட்சியில் பல குறைகள் இடம்பெற்றுவிடும். மக்கள் அவதிப்படுவார்கள். எனவே புகழ்ச்சியைக் கேளாமல் நீங்கள் உங்கள் குற்றம்குறைகளைக் கூறுபவர்களுக்கு மட்டும் பரிசளியுங்கள்,'' என்றார்.

மன்னன் வித்தியாதரரிடம் மிகவும் மதிப்பு கொண்டவன். எனவே அவன் இனிமேல் தன்னைப் புகழ்பவர்களுக்குப் பரிசு கிடையாது, தனது குறைகளைக் கூறுவோருக்கே பரிசு என்றும் அறிவித்தான். அப்படியும் அவனை எல்லோரும் புகழ்ந்தார்களேயொழிய யாருமே அவனது குறைகளைக் கூறவில்லை. இதை முதலமைச்சரிடம் கூறி, ''இப்படிப் புகழும் நம் ஊழியர்கள் அவ்வாறு

- சங்கரசுவாமி -



செய்யாதிருக்க ஒரு வழியைச் சொல் லுங்கள்,'' என்று கேட்டான்.

முதலமைச்சரும் ''யாருமே ஒரு வரை வீணாகப் புகழ மாட்டார்கள். ஏதோ ஒரு காரணத்தை மனதில் வைத்துக் கொண்டே புகழ்வார்கள். அது என்ன என்பதை நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும்,'' என்றார். மறு நாள் மன்னன் தன்னை எப்போதும் புகழ்ந்து கொண்டே இருக்கும் பணியாளிடம் ''இதோ பார்! நீ ஏன் என்னைப் புகழ்ந்து கொண்டே இருக்கிறாய்?'' என்று கேட்டான்.

அவனும் பணிவுடன், ''அரசே! யாரிடமும் குறைகள் இருக்கத்தான் இருக்கின்றன. நீங்களோ பெரிய மனிதர். நான் சாதாரணமானவன். எனவே நான் தங்களது குறை களைக் கண்டு சொல்ல முடியாது. ஆனால் புகழ்வது இப்படி இல்லை. எனவே உங்களுக்கு இருக்கும் நல்ல குணங்களைக் கூறிப் புகழ்கிறேன்,'' என்றான்.

மன்னனும் ''நீ புகழ்வதற்கு நான் பொருளாக எதையும் கொடுக்க முடியாமல் போனாலும் உன் ஏதா வது ஒரு விருப்பத்தை நிறைவேற்று கிறேன். நீ என்ன விரும்புகிறாய்?'' என்று கேட்டான். அப்பணியாளும் ''என் குடும்பம் பெரிது. என் தம்பி யின் குடும்பத்தையும் என் குடும்பத் தோடு சேர்த்து வைத்துக் கொண்டு மிகவும் சிரமப்பட்டுக் கொண்டிருக் கிறேன். என் தம்பிக்கு ஏதாவது ஒரு அரசாங்க உத்தியோகம் கொடுத் தால் தங்கள் பெயரை என்றென்றும் சொல்லிக் கொண்டு சுகமாக வாழ் வோம்,'' என்றான். மன்னனும் அப் பணியாளனின் தம்பிக்கு அரசாங்க வேலை போட்டுக் கொடுத்தான்.

மன்னனின் இச்செயலை அறிந்த பல பணியாட்களும் மன்னனைப் புகழ்ந்து தம் விருப்பங்களை நிறை வேற்றிக் கொண்டார்கள். திடீரென நிலைமை மாறியதைக் கண்ட முத லமைச்சர் அவர் செய்வது சரி அல்ல என எச்சரித்து ''அவர்கள் உங்கள் குறைகளை தாட்சண்யம் கருதிக் கூறுவது இல்லை. ஆனால் வேறு யாருடைய குறைப் பற்றிக் கேளுங் கள். உடனே சொல்லிவிடுவார்கள்,'' என்றார். மன்னனும் அதைச் செய் வதாகக் கூறினான்.

மறுநாள் மன்னன் ராமன் என்ற வேலையாளிடம் ''நீ நம் தோட்டக் காரன் சோமுவைப் போல ஏன்

என்னைப் புகழவில்லை?'' என்று கேட்டான். ராமனும் சற்றும் தயங்காமல் ''அந்த சோமு சொல்வதை எல்லாம் நம்பாதீர்கள். அவன் அண்டப்புளுகன். நான் உள்ளதை உள்ளபடி கூறுகிறேன். இதுதான் எனக்கும் அவனுக்கும் உள்ள வித்தியாசம்,'' என்றான்.

மன்னன் அவனை அனுப்பிவிட்டு தோட்டக்கார சோமுவை அழைத்து ''என் அறையைச் சுத்தம் செய்யும் ராமன் என்னைப் புகழ்வதுபோல நீ ஏன் என்னைப் புகழ்வது இல்லை?'' என்று கேட்டான். சோமுவும் ''ராமனா? அவன் கடுகை மலை போலாக்கி அளப்பவன் ஆயிற்றே. அவன் உங்களிடமிருந்து என்னென்னவோ எதிர்பார்க்கிறான். எனக்கு அப்படி எல்லாம் ஆசை இல்லை. அவன் பேராசை பிடித்தவன்,'' என்றான்.

அதன்பின் மன்னன் முதலமைச்சரை அழைத்து ''என்னைப் புகழ்பவர்கள் எல்லாம் சுயநலம் கருதியே புகழ்கிறார்கள் என்பது தெரிந்து விட்டது. சுயநலம் கருதாமல் ஒருவரை புகழக் கூடியவர் யாராவது இருக்கிறார்களா?'' என்று கேட்டான். முதலமைச்சரும் ''என் ஊரில் ஆதித்தனார் என்னும் பண்டிதர் இருக்கிறார். எப்போதும் யாரையும் புகழ்வதே அவரது வேலை. அதற்காக அவர் எதையும் எதிர்பார்ப்பதும் இல்லை,'' என்றார்.

மன்னனும் ''இப்படியும் ஒருவரா?'' என்று கேட்கவே முதலமைச்



சரும் ''நீங்கள் எங்கள் ஊருக்குப் போய் கொஞ்ச நாட்கள் ஆதித்தனாருடன் இருங்கள். உங்கள் விருப்பமும் நிறைவேறும். நாட்டிற்கும் நன்மை ஏற்படும்,'' என்றார். மன்னனும் முதலமைச்சரின் ஊருக்குப் போய் ஆதித்தனாரைக் கண்டான்.

ஆதித்தனார் அவனைக் கண்டதும் அவனது அழகிய தோற்றத்தைப் புகழ்ந்தார். பிறகு அவனது பெயரைப் புகழ்ந்தார். பிறகு அவன் அணிந்திருந்த ஆடைகளைப் புகழ்ந்தார். பிறகு அவனது முகத்தில் தென்பட்ட உணர்ச்சிகளையும் அவன் நடக்கும் விதத்தையும் புகழ்ந்தார். அதைக் கேட்ட மன்னன் தன்னிடம் இவ்வளவு சிறப்புகள் உள்ளனவா என்று எண்ணி உச்சி குளிர்ந்து போனான்.

இப்படியே சில நாட்கள் கழிந்

தன. ஆதித்தனார் தினமும் புதுப் புது விஷயங்களைக் கண்டு வான ளாவ அவனைப் புகழ்ந்து கொண்டே இருந்தார். மன்னன் தும்மினாலும் இருமினாலும் கொட்டாவி விட் டாலும் அவற்றை எல்லாம் அவர் புகழ்ந்தார்.

மன்னன் இதையெல்லாம் கேட் டுக் கேட்டுச் சலித்துப் போய் ஒரு முறை அவரைக் கண்டபடி திட்டி னான். ஆனால் அவரோ அவன் எவ் வளவு அழகாகத் திட்டுகிறான் என்று புகழ்ந்தார். அதைக் கேட்ட மன்னன் ''இப்படியே நீங்கள் எவ்வளவு காலம் புகழ்ந்து கொண்டே இருப் பீர்கள்?'' என்று கேட்டான். அவரும் ''என்று சூரியன் ஓய்வு எடுத்துக் கொண்டு போய்விடுகிறானோ, அது வரை புகழ்ந்து கொண்டே இருப் பேன்,'' என்றார்.

அப்போது அவன் உடனேயே முதலமைச்சரை அவரது ஊருக்குவரச் சொன்னான். அவர் வந்ததும் மன்னன் ''என்னை எப்படியாவது இப்போதே அழைத்துப் போய்விடுங்கள். இனி ஒரு நிமிடமும் யாரும் என்னை புகழக் கேட்டுக் கொண்டிருக்க மாட்டேன்,'' என்றான்.

அமைச்சரும் சிரித்துக் கொண்டே ''ஆதித்தனார் மாபெரும் பண்டிதர் எல்லாம் கற்றவர். அவர் தன்னைப் பிறர் புகழக் கூடாது என்பதற்காக பிறரைப் புகழ்ந்து கொண்டே இருக் கிறார். இதனால் சலிப்படைந்த இந்த ஊர் மக்கள் யாரும் இவர் முன் நிற்பது கூட இல்லை. தமது வேலைகளை அக்கறையுடன் செய்கிறார்கள். இத னால் ஊர் செழிப்பாயும் சுக வாழ்வு கொண்டதாயும் உள்ளது. பண்டிதர் பிறர் தம்மைப் புகழக் கூடாது என்று எண்ணி ஊருக்கு நன்மை செய்தார். அதுபோல நீங்களும் பிறர் புகழ் வதைக் கேளாமல் இருந்தால் நாடு சுகவாழ்வு பெறும்,'' என்றார்.

மன்னன் விஜயேந்திரனின் மனக்கண் திறந்தது. அன்று முதல் அவன் புகழ்ச்சிகளைக் கேளாமல் தனது ஆட்சியில் முழு கவனம் செலுத்தி நாட்டை முன்னேறச் செய்தான்.



## விண்வெளியிலும் கணிப்பு!

அண்மையில் அக்டோபர் 9லிருந்து 16 வரை ரஷ்யாவில் மக்கள்தொகைக் கணக்கு எடுக்கப்பட்டது. ஒருவரைக் கூட விட்டுவிடாமல் வீடு வீடாகச் சென்று அதிகாரிகள் கணக்கு எடுத்தார்கள்.



அப்போது வாலேரி கோர்சுன் என்பவரும் செர்ஜிட்ரெசெவ் என்பவரும் உலக விண்வெளி நிலையத்தில் (ஐ.எஸ்.எஸ்.) இருப்பதை அறிந்த அதிகாரிகள் அவர்கள் இருவரையும் கணக்கில் சேர்க்க இரு விண்வெளி வீரர்களை உரிய படிவங்களுடன் அந்த விண்வெளி நிலையத்திற்கு அனுப்பி அவற்றில் அவர்களது கையொப்பங்களைப் பெற்றுவரச் செய்தார்கள்!

## நம் நாட்டில் மிக வேகமானது

கோவாவிலிருந்து மும்பை செல்லும் விரைவு ரயில் வண்டி 8 மணி நேரத்தில் அத்தூரத்தைக் கடக்கிறது. 12 ஆண்டுகளுக்கு முன் போடப்பட்ட கொங்கண் ரயில்பாதையில் 4 மணி 30 நிமிடங்களில் கடக்க ரயிலின் வேகத்தை அதிகரிக்கத் திட்டமிடப் பட்டுள்ளது. மணிக்கு 150 கி.மீ. வேகத்தில் செல்லும் இது நம் நாட்டில் மிக வேகமாகச் செல்லும் ரயிலாகும். தற்போது புது டில்லிக்கும் போபாலுக்கு இடையே ஓடும் ராஜதானியும், சதாப்தி விரைவு வண்டியும் தான் மிக அதிக வேகத்தில் செல்பவை. இவற்றின் வேகம் ஒரு மணிக்கு 120 கி.மீ. தான்.





# இருவித மனிதர்கள்!

ஆட்டூரில் ஆறுமுகசாமி கோடீஸ்வரர். ஏராளமான சொத்துடன் தாராள மனம் படைத்தவர். தான் செய்யும் உதவி யாருக்குமே தெரியக் கூடாது என்பதற்காக அவர் தமக்கு மிகவும் நம்பகமான வேலப்பன் என்பவன் வாயிலாக தேவைப்படுபவர்களுக்குப் பணஉதவி கிடைக்கச் செய்து வந்தார். வேலப்பனும் பணம் கொடுத்து உதவுபவர் ஆறுமுகசாமி என்று கூறாமல் பெயர் சொல்ல விரும்பாத ஒரு பெரிய மனிதர் எனக் கூறி தேவைப்படுபவர்களுக்குப் பணத்தைக் கொடுத்து வந்தான். இதனால் ஆறுமுகசாமி செய்யும் தானதர்மங்கள் ரகசியமாகவே இருந்தன.

ஆட்டூருக்குப் பக்கத்து ஊரான காட்டூரில் கனகசபை என்ற பெரும் பணக்காரன் இருந்தான். ஆறுமுகசாமிக்கு அவன் மைத்துனன். அவன் யாருக்காவது அரை ரூபாய் தானம் கொடுத்தாலும் ஐம்பது பேர்கள் பார்க்கக் கொடுப்பான். தான் செய்யும் தான தர்மம் ஊர் முழுவதும் தெரிய வேண்டும் என ஆசைப்படுபவன். இதுபற்றி அவன் ஆறுமுகசாமியிடம் பேசியபோதெல்லாம் அவர் ''ஆர்ப்பாட்டத்தோடு படாடோபமாய் தானம் செய்பவனுக்கு அகம்பாவம் வந்துவிடும். இது மிகவும் கெடுதலானது,'' எனக் கூறி வந்தார்.

ஒருமுறை இவ்வாறு அவர் கனகசபையிடம் கூறியபோது அவனும் ''இந்த நிலையில் உங்களுக்கு எங்களூர் அழுமூஞ்சி அப்பாசாமியை அறிமுகம் செய்து வைக்க நினைக்கிறேன். அவன் குடுகுடு கிழவன். உலகத்தில் கஷ்டங்கள் எல்லாம்

- காரை. குருமூர்த்தி -

தனக்குத்தான் வருகிறது என்று எண்ணி அவன் எப்போதும் அழு பவன். அவனது முகத்தில் சிரிப்பு என்பதைக் காணவே முடியாது. அது மட்டுமல்ல, மிகப்பெரும் தொகையை அவனுக்கு யாராவது தானமாகக் கொடுத்தாலும் அதுபற்றி அவன் மூச்சுக் கூட விடமாட்டான்,'' என்றான்.

அதைக் கேட்ட ஆறுமுகசாமி அப் போது எதுவும் கூறவில்லை. ஆனால் தன் நம்பக ஆளான வேலப்பனைக் காட்டூருக்கு அனுப்பி அழுமூஞ்சி அப்பாசாமியைப் பற்றி முழு விவ ரங்கள் சேகரித்து வருமாறு கூறி அனுப்பினார். வேலப்பனும் காட் டூருக்குப் போய்விட்டு வந்து அவ ரிடம் ''அப்பாசாமியின் மனைவி இப்போது உயிருடன் இல்லை. அவ னுக்கு நான்கு மகன்கள். அவர் களுக்குத் திருமணமாகிவிட்டது. அவர்கள் தம் மனைவி மக்களுடன் அப்பாசாமியின் வீட்டில் வசதியாக வாழ்கிறார்கள். ஆனால் அப்பா சாமியை வீட்டின் மாட்டுக் கொட் டிலில் போய் இருக்கச் சொல்லிவிட் டார்கள். அவனை கவனிப்பாரே அந்த வீட்டில் இல்லை. தினமும் யாராவது ஒரு மருமகள் ஒரு வேளை கஞ்சியை ஒரு தட்டில் ஊற்றி வைத்துவிட்டுப் போய்விடுவாள். அவன் அந்தக் கஞ்சியைப் பிறகு கழுநீர்ப் பானையில் கொட்டிவிட்டு ஊருக்குள் போய் சாப்பாட்டுக் கடையில் பணம் கொடுத்து முழுச் சாப்பாட்டைச் சாப்பிட்டு வருவான்.



அவனது நிலையைக் கண்டு பலர் அவனுக்குப் பணம் கொடுத்து வந் தார்கள். அவன் அதை யாருக்கும் தெரிவிக்காமல் மறைத்து வைத்துக் கொண்டு காலம் கழிக்கிறான்,'' என்று கூறினான்.

ஆறுமுகசாமி வேலப்பனிடம் கொஞ்சம் பணத்தைக் கொடுத்து அவன் காட்டூருக்குப் போய் என்ன செய்ய வேண்டும் என்று கூறி அனுப்பினார். வேலப்பனும் காட் டூரில் அப்பாசாமியின் வீட்டிற்குப் போய் அவனது நான்கு மகன்களை அழைத்து ''இது வெகுகாலத் திற்குமுன் நடந்தது. என் தந்தை இளைஞராக இருந்தபோது ஆற்று வெள்ளத்தில் அடித்துச் செல்லப் பட்டாராம். நீந்தத் தெரியாத அவரை உங்கள் தந்தை ஆற்றில் குதித்துக்

கரைக்குக் கொண்டு வந்து சேர்த் தாராம். என் தந்தை இறக்கும்போது இந்த விஷயத்தை என்னிடம் கூறி, தன் உயிரைக் காப்பாற்றியதற்காக நன்றி செலுத்தும் வகையில் ஒரு குறிப்பிட்ட தொகையை உங்கள் தந்தைக்கு அவர் உயிருடன் இருக்கும் வரை மாதாமாதம் கொடுத்து வரும் படிக் கூறினார். இனிமேல் மாதா மாதம் நானே இங்கு வந்து அவரிடம் பணம் கொடுத்துவிட்டுப் போகி றேன்,'' என்றான்.

அதைக் கேட்ட நான்கு மகன் களும் மகிழ்ந்துபோய் அப்பா சாமியை வீட்டிற்குள் அழைத்து வந்து கட்டிலைப் போட்டு மெத்தை விரித்து ''அப்பா! இனி நீங்கள் கண்ட கண்ட இடங்களில் படுக்க வேண் டாம். சுகமாக இங்கே இருங்கள். உங்களுக்கு வேண்டியதை நாங்கள் வாங்கிக் கொண்டு வந்து கொடுக் கிறோம்,'' என்றார்கள்.

அதைக் கேட்டு அழுமூஞ்சி அப்பாசாமி இனி தனக்கு சுகவாழ்வு கிடைப்பதை எண்ணிச் சிரித்தான். அப்போதுதான் சிரிப்பை அவனது முகத்தில் கண்ட வேலப்பன் ஆறுமுக சாமி கொடுத்த பணத்தை அவனிடம் கொடுத்துவிட்டுத் தன் ஊருக்கு வந்து ஆறுமுகசாமியிடம் அப்பாசாமியின் வீட்டில் நடந்ததைக் கூறினான்.

அப்போது ஆறுமுகசாமியுடன் இருந்த கனகசபை ''இனிமேல் மாதா மாதம் அப்பாசாமிக்குப் பணம் கொடுக்கப் போகிறீர்களா?'' என்று கேட்டான். அவரும் ''ஆமாம். ஓர் அழுமூஞ்சியைச் சிரிக்க வைத்துவிட் டேன். இவ்வளவு பணத்தையும் வைத்துக் கொண்டு நான் என்ன செய்யப் போகிறேன்? என் பணத் தால் பிறர் மகிழ்கிறார்கள் என்றால் அதுவே எனக்குத் திருப்திதான்,'' என்றார்.

கனகசபை கிளம்பவே அப்போது ஆறுமுகசாமி சிரித்துக் கொண்டே, ''சரி. அழுமூஞ்சி அப்பாசாமி மாதிரி இன்னும் யாராவது இருந்தால் சொல். மறந்துவிடாதே!'' என்றார்.



# நம்பிக்கையே வெற்றி!

ரத்னகிரியும் தும்பாவும் அடுத்தடுத்து உள்ள நாடுகள். அவை எப்போதும் போரிட்டு வந்தன. ரத்னகிரியின் படை பலம் தன் படையின் பலத்தை விட மிக அதிகம் என்பது தும்பாவின் சேனாதிபதி வீரசேனனுக்கு நன்கு தெரியும். ஒருமுறை போர் வீரர்களுடன் அவன் போர்க்களத்திற்குச் சென்று கொண்டிருந்தான்.

தும்பாவின் படைவீரர்கள் கூட போரில் தமக்கு வெற்றி கிடைக்காது என நம்புவதையும் வீரசேனன் அறிந்தே இருந்தான். அவர்களது இந்தத் தோல்வி மனப்பான்மையைப் போக்க அவனுக்கு ஒரு வழி தெரிந்தது. போர்க்களத்திற்குப் போகும் வழியில் ஒரு காளிதேவிக் கோயில் இருந்தது. வீரசேனன் தன் படை வீரர்களை அக்கோயிலின் முன் நிற்கச் செய்து காளிதேவியை வழிபட்டான்.

அப்போது அவன் தன் வீரர்களிடம் ''வீரர்களே! காளிதேவியின் அருள் நமக்கு முழுவதுமாக உள்ளது. எதிரியின் படை மிகப் பெரியது என்று எண்ணிப் பயப்படாதீர்கள். தேவி நமக்குத் துணை இருப்பாளா என்பதை இந்த நாணயத்தைக் கொண்டு 'பூவா? தலையா?' எனப் போட்டுப் பார்க்கலாம். நாணயத்தின் தலை வந்தால் நமக்கு வெற்றி. காளி தேவியின் அருள் நமக்கே என நம்புவோம்,'' எனக் கூறித் தன் சட்டைப் பையிலிருந்து ஒரு நாணயத்தை எடுத்துச் சுண்டினான். நாணயம் தரையில் விழுந்து தலையைக் காட்டியது.

வீரர்கள் உற்சாகத்துடன் ''ஆ! தலை வந்தது! வெற்றி நமக்கே. காளிதேவியின் அருள் நமக்கே!'' என்று கோஷங்கள் போட்டவாறே போர்க்களத்திற்குப் போய் கடும் போர் புரிந்தார்கள். ரத்னகிரியின் படை தோற்று ஓடியது. தும்பா வென்றது.

அப்போது வீரசேனன் ஒரு தளபதியிடம் ''எதிலும் முழு நம்பிக்கை வைக்க வேண்டும். நமக்குக் காளிதேவியின் அருள் இருப்பதை இந்த நாணயத்தைக் கொண்டு பூவா, தலையா எனப் போட்டு வந்த முடிவை நம்பினோம்,'' எனக் கூறித் தான் சுண்டிப் போட்ட நாணயத்தைக் காட்டினான். அந்த நாணயத்தின் இரு பக்கங்களிலும் 'தலை' இருப்பது கண்டு தளபதி திகைத்து நின்றான்.



## ஆந்திரப் பிரதேச கிராமியக் கதை

ஆந்திரப் பிரதேசத்திற்கு இயற்கை அன்னை பல அழகிய பரிசுகளை அளித்திருக்கிறாள். தொழில் நுணுக்கங்களிலும் இது நன்கு முன்னேறி உள்ளது. இம் மாநிலம் செழிப்பானது. இரு பெரிய நதிகளான கோதாவரியும், கிருஷ் ணாவும் இங்கு பாய, இவற்றின் பல கால்வாய்கள் வேளாண்மைக்குப் பெரிதும் உதவுகின்றன. நம் நாட் டிலே மிக அதிக அளவில் அரிசியை அளிப்பது இந்த மாநிலமே.

இதன் பரப்பளவு 2,76,754 சதுர கி.மீ. நாட்டிலேயே ஐந்தாவது பெரிய மாநிலம் இது. இதன் மக்கள் தொகை 75,727,541. இம்மாநிலம் 1956 நவம்பர் முதல் தேதியில் உருவாக்கப்பட்டது.

கிழக்கே வங்கக் கடலும், மேற்கே கர்நாடகமும், வடக்கே மகாராஷ் டிரம், சத்தீஸ்கட், ஒரிஸ்ஸா மாநிலங் களும், தெற்கே தமிழ்நாடும் இதன் எல்லைகளாக உள்ளன. இதன் கடற்கரையின் நீளம் 972 கி.மீ. நம் நாட்டிலேயே மிகவும் நீண்ட கடற் கரையை இம்மாநிலம் கொண்டுள் ளது. ஹைதராபாத் இதன் தலைநகர். தெலுங்கு இதன் ஆட்சி மொழி. ஹிந்தி, உருது, ஆங்கிலம் ஆகி யவை இங்கு பேசப்படும் பிற மொழிகள்.

# விலையுயர்ந்த அறிவுரை

வாரங்கல் மன்னன் பிரதாபருத் திரன் தன் மகன் ராமலிங்கனின் போக்கைக் கண்டு அதிருப்தி அடைந் தான். ஏனெனில் ராமலிங்கன் இளகிய மனம் கொண்டிருந்தான். மன்னன் என்பவன் கடுமையாக நடக்கத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பது பிரதாபருத்திரனின் எண் ணம். அவன் தன் மனைவி நாரா யணம்மாவிடம், ''நீதான் ராமலிங் கனுக்குச் செல்லம் கொடுத்துக் கெடுத்துவிட்டாய். அவன் கண்டிப் புடன் நடக்காது போவதற்கு நீதான்



காரணம். உன் மகன் இங்கேயே அடைந்து கிடந்தால் கிணற்றுத் தவளையாகிவிடுவான். அதனால் நாட்டின் பல இடங்களுக்குப் போய் வந்தால் ஒரு மன்னன் கண்டிப்புடன் ஏன் நடந்து கொள்ள வேண்டும் என்பதைப் புரிந்து கொள்வான்,'' எனக் கூறி ராமலிங்கனை அழைத்து, ''ராமா! எனக்குப் பிறகு நீ இந்த நாட்டின் மன்னனாகப் போகிறாய். அதனால் நம் நாட்டைச் சுற்றிப் பார்த்து எப்படி இருக்கிறது என்று தெரிந்து கொண்டு வா!'' என்று சொல்லி அனுப்பினான். ராமலிங்கனும் அப்படியே செய்வதாகக் கூறி முதலில் தலைநகரில் சுற்றி வரலானான்.



உச்சிவேளையின்போது அவன் ஒரு சிறுவீட்டின் பக்கம் சென்று கொண்டிருந்தபோது அதனுள்ளிருந்து ஒரு குரல் ''நான் கோயில் அர்ச்சகன். என்னிடம் பணம் ஏது? சில அறிவுரைகளைத் தான் கொடுக்க முடியும். நீ அவற்றை விற்றுப் பணமாக்கு. அவை லட்சம் பவுன்கள் விலை போகும். அந்தப் பணத்தால் எல்லா செலவுகளையும் செய்!'' என்றான்.

மனைவியோ ''அறிவுரைகளை விற்பதா? அதை யார் வாங்குவார்கள்?'' எனவே, கணவனோ ''எல்லாம் வாங்குவார்கள். இந்தா, இதைப் பிடி!'' என்று சொல்லி மூன்று அறிவுரைகளை ஒரு பனை ஓலையில் எழுதிக் கொடுத்தான். ராமலிங்கன் அத்தம்பதிகளுக்கு உதவ எண்ணினான். அதனால் வீட்டிலிருந்து அந்தப் பெண் வெளியே வந்ததும் ''அம்மணி! இங்கே யாரோ அறிவுரைகள் விற்கிறார்களாமே. எனக்குச் சில வேண்டும்,'' என்றான்.

அவளும் ''அப்படியா? என்னிடம் அருமையான மூன்று அறிவுரைகள் உள்ளன. ஆனால் அவற்றின் விலை லட்சம் பவுன்கள்,'' என்றாள். ராமலிங்கனும் தன் விரலிலிருந்த வைர மோதிரத்தைக் கழற்றிக் கொடுத்து, ''இது லட்சம் பவுன்களுக்கு மேலாகவே மதிப்பானது. இதை எடுத்துக் கொண்டு அந்த அறிவுரைகளைக் கொடு!'' எனவே அவளும் அறிவுரைகள் உள்ள பனை ஓலையை அவனிடம் கொடுத்தாள்.

அந்தப் பனை ஓலையில் மூன்று அறிவுரைகள் இருந்தன. முதலாவது



## கலை, கைவினைகள்

ஆந்திர மன்னர்கள் கலைகளையும் கைவினைகளையும் நன்கு ஆதரித்து வந்தார்கள். கலம்காரி என்னும் சிறப்புக்கலை இங்கு நன்கு வளர்ச்சி அடைந்துள்ளது. இது துணிகளில் பல உருவங்களைப் பதிப்பதாகும். இதை 'கலம்' எனப்படும் இறகுப் பேனா கொண்டு வரைகிறார்கள். இந்த உருவங்கள் புராணங்களின் அடிப்படையில் வரையப்படுகின்றன. இவை திரைச்சீலைகளிலும் படுக்கை விரிப்புகளிலும் ஆடைகளிலும் பதிக்கப்படுகின்றன. காளஹஸ்தியைச் சுற்றிலுமுள்ள பகுதியில் இக்கலைஞர்கள் உள்ளனர்.

மற்றொரு கைவினை கொண்டப்பள்ளி பொம்மை செய்யும் தொழில். இலேசான மரத்தால் பொம்மைகள் பலவிதங்களில் உருவாக்கப்பட்டு வண்ணங்கள் தீட்டப்படுகின்றன. ஹைதராபாத் முத்துக்களுக்கும் வளையல்களுக்கும் புகழ் பெற்றது. கண்ணாடி வளையல்கள் பல வண்ணங்களில் பல ரகங்களில் கிடைக்கின்றன. இவை கையால் செய்யப்படுபவை. முத்துக்களை அழகாய்ப் பதித்துக் கொடுக்க கைதேர்ந்த கலைஞர்கள் இங்கு உள்ளனர். உலோகப் பொருள்களும் அழகாகச் செய்யப்படுகின்றன.

'முன்பின் தெரியாத இடத்தில் படுத்துத் தூங்காதே, அங்கே படுத்துத் தூங்கினால் நீ மறுபடியும் எழுந்திருக்கமாட்டாய்!' என்பது. இரண்டாவது 'நீ உன் பணக்கார உறவினர் வீட்டிற்குப் பகட்டாகப் போனாலே உனக்கு நல்ல வரவேற்பு கிடைக்கும். ஆனால் ஏழை போலப் போனால் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளுவார்கள். பணக்காரர்கள் ஏழை உறவினர்களை விரும்பமாட்டார்கள்' என்பது. மூன்றாவது அறிவுரை 'ஒரு வேலை கடினமானதாயும் ஆபத்தானதாகவும் இருந்தாலும் பயமில்லாமல் உன் முழுபலத்தையும் கொண்டு அதைச் செய்துமுடி!' என்பதாகும்.

ராமலிங்கன் அந்த அறிவுரை ஓலையை பத்திரமாக வைத்துக் கொண்டான். மறுநாள் அவனது தந்தை, ''நீ நேற்று நகரைச் சுற்றிப் பார்த்தாயே, என்ன தெரிந்து கொண்டாய்?'' என்று கேட்டார்.

அவனும் மூன்று அறிவுரைகளை விலைக்கு வாங்கியதாகக் கூறவே, மன்னன் கோபத்தோடு ''போடா முட்டாள்! உன்னை யாரோ நன்கு ஏமாற்றி விட்டான். அறிவுரையை விலைக்கு வாங்கும் நீ எப்படி அரசனாக இருக்க முடியும்? போ,

போ!'' என்று கூறி விரட்டி விட்டான்.

ராமலிங்கன் அரண்மனையை விட்டு வெளியேறினான். அவன் தன் குதிரையைச் செலுத்தியவாறே இரவானபோது ஒரு சிறிய நகரின் சத்திரத்தை அடைந்தான். சத்திரக்காரனிடம் அன்றிரவு தங்க இடம் கேட்கவே, அவனும் ராமலிங்கன் அணிந்திருந்த ஆடை ஆபரணங்களைக் கண்டு அவனுக்கு நேர்த்தியான அறையைக் கொடுத்தான்.

ராமலிங்கனும் அந்த அறையில் படுத்தான். அவன் தூங்க நினைக்கையில் முதலாவது அறிவுரை நினைவிற்கு வந்தது. அதன்படி அவன் தூங்காமல் விழித்துக் கொண்டிருந்தான். நள்ளிரவில் சத்திரக்காரன் அவனைக் கொல்ல கையில் வாளுடன் வந்தான். ஆனால் ராமலிங்கன் அவனைக் கையும் களவுமாகப் பிடித்துவிட்டான்.

சத்திரக்காரன் உடனே அவனது கால்களில் விழுந்து தன்னை மன்னித்துவிடுமாறு கெஞ்சினான். இளகிய மனம் படைத்த ராமலிங்கன் அவனை மன்னித்து விட்டு மறுநாள் காலையில் அங்கிருந்து சென்றான். அதன்பிறகு அவன் தன் மாமனின் நாட்டை அடைந்து மாமாவைக் காண தர்பாருக்குச் சென்றான். அவன் நெடுந்தூரம் பயணம் செய்து வந்ததால் அவனது ஆடைகளில் தூசு படிந்தும் அவன் அலங்கோலமாகவும் தென்பட்டான்.

தர்பாருக்குள் சென்று அவன் 'மாமா' எனக் கூப்பிட்டபோது அந்நாட்டு மன்னனான மாமன் அவனை அலட்சியமாகப் பார்த்து, ''யார் நீ? முன்பின் தெரியாத நீ என்னை மாமா என்று அழைக்க என்ன தைரியம்? போய்விடு!'' எனக் கடுங்குரலில் கூறினான்.

அப்போது அவனுக்கு இரண்டாவது அறிவுரை நினைவிற்கு வந்தது. அதன்படி அவன் தர்பாரிலிருந்து போய் நன்கு குளித்து பகட்டான ஆடைகளை அணிந்துகொண்டு மீண்டும் தன் மாமனின் தர்பாருக்குள் கம்பீர நடைபோட்டுக் கொண்டு நுழைந்தான். இந்தத் தடவை அரச குமாரன் போல வந்த ராமலிங்கனை அவனது மாமன் ''வா மருமகனே! வா!'' என்று கூறி வரவேற்றான்.

சில நாட்கள் அவன் தன் மாமனின் அரண்மனையில் இருந்துவிட்டு வேறொரு நாட்டின் தலைநகருக்குச் சென்றான். அங்கு ஒரு தெருவில் ஒரு





## திருப்பதி மலை

பக்தர்களுக்குத் திருப்பதி நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக புனிதத் தலமாக விளங்குகிறது. திருமலையில் அமைந்துள்ள திருப்பதிக் கோயிலின் வெங்கடேசப் பெருமாளைத் தரிசிக்க தினமும் கூட்டம் நிரம்பி வழிகிறது. கிழக்குத் தொடர் மலையில் ஏழு குன்றுகளில் ஒன்றே திருமலை. வெங்கடேசுவரரை பாலாஜி என்றும் ஏழுமலை ஆண்டவன் என்றும் வழிபடுகிறார்கள். இக்கோயிலைப் பற்றிய வரலாறு ஒரு புதிராக இருந்தாலும் பல்லவர்கள், சோழர்கள், பாண்டியர்கள், விஜயநகர மன்னர்கள், மைசூர் மன்னர்கள் எனப் பல மன்னர்கள் இதனைப் பேணி வந்தார்கள். இக்கோயில் தென்னிந்தியக் கலையில் கட்டப்பட்டுள்ளது. இதன் கொடிமரமும், கர்ப்பக் கிருகத்தின் விமானமும் தங்கத் தகடுகளால் மூடி வைக்கப்பட்டுள்ளன.

குயவன் அழுது கொண்டிருப்பதைக் கண்டு ''ஏனப்பா அழுகிறாய்?'' என்று கேட்டான். அதற்கு அவன் ''ஐயோ! இன்று என் மகன் அரச குமாரியை மணந்து கொள்ள வேண்டுமே. நான் என்ன செய்வேன்? இந்நாட்டு இளவரசிக்கு தினமும் காலையில் திருமணம் நடக்கிறது. ஆனால் அன்றிரவே மணமகன் அவளது படுக்கை அறையில் மர்மமான முறையில் இறந்து போகிறான். இன்று அரசகுமாரியை மணக்க வேண்டியது என் மகனின் முறை,'' என்றான்.



அப்போது ராமலிங்கனுக்கு துணிந்து செயல்பட்டு வேலையை முடிக்க வேண்டும் என்ற மூன்றாவது அறிவுரை நினைவிற்கு வந்தது. அவன் குயவனிடம் ''கவலைப் படாதே! உன் மகனுக்குப் பதிலாக நான் போய் அரசகுமாரியை மணக்கிறேன்,'' என்று அந்த அழகிய அரசகுமாரியை மணந்து கொண்டான்.

அன்றிரவு ராமலிங்கனும் அரசகுமாரியும் படுக்கை அறைக்குள் சென்றனர். அரசகுமாரி கட்டிலில் படுத்துத் தூங்கிவிட்டாள். ஆனால் ராமலிங்கனோ தூங்காமல் இருந்



தான். நள்ளிரவாயிற்று. இரு விஷப் பாம்புகள் கட்டிலுக்கு அடியில் இருந்து வந்து கட்டில் கால்களைப் பற்றி ஏறின. ராமலிங்கன் சற்றும் தயங்காமல் அவற்றை அடித்துக் கொன்றான்.

மறுநாள் மன்னன் தன் மகளை மணந்தவன் உயிரோடு இருப்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டான். ராமலிங்கன் பாம்புகள் வந்ததைக் கூறி அவற்றைக் கொன்றுவிட்டதையும் சொன்னான்.

மன்னன் அதுகேட்டு மகிழ்ந்தான். அடுத்து ராமலிங்கன் ஓர் அரச குமாரன் என அறிந்து இருமடங்கு சந்தோஷம் அடைந்தான். அந்த மன்னன் தன் மகளையும் ராமலிங்கனையும் அவனது நாட்டிற்கு அனுப்பி வைத்தான். அங்கு பிரதாபருத்திரனும் அவனது மனைவியும் அவர்களை அன்புடன் வரவேற்றார்கள். ராமலிங்கனும் நடந்ததைக் கூறவே, அவனது தந்தை ''நீ நல்ல அனுபவமே பெற்றாய்,'' எனக் கூறி மகிழ்ந்தான்.

## பார்க்கத் தக்க இடங்கள்

புனிதத் தலங்கள் மட்டும் அல்லாமல் ஆந்திரப் பிரதேசத்தின் பல இடங்கள் பார்க்கத்தக்கவை. ஹைதராபாத் இந்தியாவில் ஐந்தாவது பெரிய நகரம். சார்மினார், கோல்கொண்டா, சாலார்ஜங் அருங்காட்சியகம், உஸ்மானியா பல்கலைக்கழகம் முதலியன அங்கு பார்க்கத்தக்கவையாம். ஹைதராபாதும் செகந்திராபாதும் ஹுசைன் சாகர் என்ற பெரிய ஏரியால் பிரிக்கப்பட்டுள்ளன.

விசாகப்பட்டணம் மற்றொரு சுற்றுலாத் தலம். இங்குள்ள கடற்கரைக்கு மக்கள் திரளாக வருகிறார்கள். இங்கிருந்துதான் அரக்கு பள்ளத்தாக்கு, டைடா முகாம், போர்ரா குகைகளைக் காண சுற்றுலாப் பயணிகள் செல்கிறார்கள். இம்மாநிலத்தில் நாகார்ஜுன சாகர், பத்திராசலம், லேபாட்சி, மந்தராலயம், புட்டபர்த்தி, அமராவதி போன்ற இடங்களும் எதிபோதலா நீர்வீழ்ச்சியும் காணத் தக்கவை.

# நம் இந்தியா

*ஜனவரி மாதத்தில் சிறப்பானது குடியரசுதின படை அணிவகுப்பு. இது ஜனவரி 26ல் நம் நாட்டின் முன்னேற்றத்தைக் காட்டி பொறியியல், தொழில் துறை, வணிகத் துறை, விவசாயம், கல்வி, சுகாதாரம் ஆகிய துறைகளின் சிறப்புகளை ஊர்திகள் வாயிலாகத் தெரிவிக்கிறது. எனவே இம்மாத வினாக்கள் நம் நாட்டின் முன்னேற்றம் பற்றியவையே.*

1. நம்முடைய தற்போதைய அணுசக்தியின் அளவு என்ன?
2. இன்சாட்-1பி செயற்கைக் கோள் எந்த ஆண்டில் வெற்றிகரமாகச் செலுத்தப்பட்டது?
3. நம் நாட்டு கடல் ஆய்வுக் கப்பல்களில் மிகப் பெரியதும் நவீன நுணுக்கங் களும் கொண்ட 'சாகர் கன்யா' எந்த நாட்டிலிருந்து வாங்கப்பட்டது?
4. தரையில் ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குச் செலுத்தப்படும் நம் நாட்டின் ஏவுகணையின் பெயர் என்ன?
5. நம் நாடு விண்வெளியில் ஓர் ஆணையும், ஒரு பெண்மணியையும் அனுப் பியது. அவர்கள் யார்? எப்போது அப்பயணம் செய்தார்கள்?
6. தசம நாணய முறையை நம் நாடு எப்போது நடைமுறையில் கொண்டு வந்தது?
7. பல்கலை மானியக் கழகம் எப்போது அமைக்கப்பட்டது?
8. இந்தியாவில் மிக மிக உயர்ந்த கட்டடம் எங்கு, எந்த ஆண்டில் கட்டப்பட்டது?

*(விடைகள் அடுத்த மாதம்)*

## டிசம்பர் 2002 வினாக்களின் விடைகள்

1. பிர்லா மந்திர் பிரார்த்தனைக் கூட்டத்தில் மேடையருகே ஒரு வெடிகுண்டு வெடித்தது.
2. லெப்டினன்ட் ஜெனரல் கே.எம். கரியப்பா முதலாவது இந்தியக் கமாண்டர் இன் சீஃப் ஆனார்.
3. 74 கட்சிகள், 14 தேசியக் கட்சிகள்.
4. சி.டி. தேஷ்முக் - ஆறுமுறை.
5. அலகாபாதில் பிப்ரவரி 1954-ல் சுமார் 500 பேர் உயிரிழந்தனர்.
6. 1954-ஆம் ஆண்டு - டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன், சி. ராஜகோபாலாச்சாரியார், சி.வி. ராமன்.
7. சச்சின் நாக். 100 மீட்டர் நீச்சலில்.
8. பம்பாயின் (மும்பை) ஆர்ச் பிஷப் வாலரியன் கிராசியா, ஜனவரி 12, 1953.
9. மத்திய பாரதத்திலுள்ள இந்தூர்.
10. ரமண மகரிஷியும் அரவிந்தரும்.



# விநாயகர்

கிருஷ்ணர் கூறியது கேட்டு மிருதங்க கேசரி, ''அப்படி எல்லாம் சொல்லித் தப்ப முடியாது. உன் குழலோசை உயர்ந்ததா அல்லது என் மிருதங்க வாசிப்பு சிறந்ததா என்று பார்த்துவிட வேண்டும்,'' என்றான்.

கிருஷ்ணரும் தன் குழலை இசைப்பதற்காக எடுத்தார். கேசரியும் மிருதங்கத்தைச் சுருதி கூட்டினான். கிருஷ்ணர் யமுனாகல்யாணி ராகத்தை ஆலாபனம் செய்து கீர்த்தனம் வாசிக்கலானார். கேசரி அதற்கு ஏற்ப மிருதங்கம் வாசிக்க முடியாமல் திணறலானான். அது மட்டுமல்ல, குழலின் இனிமையை ரசித்தவாறே மெய்மறந்த அவன் மிருதங்கம் தட்டுவதைக் கூட நிறுத்திவிட்டான். பின்னர் அந்த உருவை கேசரி விட்டு விநாயகராகி நாட்டியம் புரியலானான். அப்படி ஆடி ஆடிக் களைத்தும் போய்விட்டான். அப்போது திடீரென்று கிருஷ்ணர் குழல் ஊதுவதை நிறுத்திவிட்டார். நாட்டியம் ஆடிய விநாயகரோ சட்டென நிற்க முடியாமல் தட்டுத் தடுமாறினார்.

அப்போது கிருஷ்ணர் சட்டென விநாயகரைப் பிடித்து நிறுத்தி ''விநாயகா! நீ கீழே விழுந்துவிட்டால் உன் தாயார் இனிமேல் குழலோசையை நீ கேட்கக் கூடாது எனத் தடை செய்துவிடுவாள். அதனால் தான் உன்னைப் பிடித்து நிறுத்தினேன்,'' என்றார்.

விநாயகரும், ''கிருஷ்ணா! உன் குழலோசையைக் கேட்டு ரசிக்க வேண்டும் என்று தான் கேசரி



உருவில் வந்தேன்,'' என்றார். கிருஷ்ணரும் ''விநாயகா! உன் மிருதங்க சத்தத்தில் உன் வாகனமாகிய மூஞ்சூறு துள்ளிக் குதித்து விழுந்து விட்டதே. பாவம்!'' எனக் கூறி கீழே கிடந்த மூஞ்சூறைத் தடவிக் கொடுத்தார்.

விநாயகரும் ''கிருஷ்ணா! கம்சனுக்கு முடிவுகாலம் நெருங்கிவிட்டது. தனுர்யாகம் செய்து உன்னை அழைத்துவர அக்ரூரரை அனுப்புவான். நீ போய் அவனைக் கொன்று நன்மை புரி,'' என்றார். கிருஷ்ணரும் ''எல்லாம் உன் தயவால் நல்ல விதமாகவே முடியும்,'' எனக் கூறிக் கைகூப்பி நின்றார்.

விநாயகரோ, ''நீ விஷ்ணுவின் அவதாரம். என் தயவு என்ன! எல்லாம் உன் லீலைகளே. அர்க்கை கூட கூனி வடிவில் உன்னை எதிர்நோக்கி இருக்கிறாள். அவளுக்குக் கருணை காட்டு'' எனக்கூறித் தன் வாகனத்தின் மீது ஏறி அமர்ந்து ஆகாயத்தில் கிளம்பி மறைந்து போனார்.

அக்ரூரர் கிருஷ்ணரையும் பலராமனையும் தேரில் அமர்த்தி மதுராபுரிக்கு அழைத்துச் சென்றார். எட்டு கோணல்கள் கொண்ட உடலோடு அர்க்கை கூனியாக வந்து கிருஷ்ணரை வணங்கி அவருக்குச் சந்தனம் பூசி விழுந்து வணங்கினாள். கிருஷ்ணர் அவளைத் தம் இரு கைகளாலும் தூக்கவே அவள் அழகிய அப்சரப் பெண்ணாக மாறி தேவலோகம் போய்ச் சேர்ந்தாள்.

கம்சன் கிருஷ்ணரைக் கொல்லப் பலவிதத்திலும் முயன்றான். ஆனால் கிருஷ்ணர் அவற்றை எல்லாம் முறியடித்து அவனையே சிம்மாசனத்தின் மீதிருந்து இழுத்துக் கீழே தள்ளினார். கம்சனும் விழுந்து இறந்தான்.

கிருஷ்ணர் தேவகியையும் வசுதேவரையும் சிறையிலிருந்து விடுவித்தார். உக்கிரசேனனையும் விடுதலை செய்து சிம்மாசனத்தில் அமர்த்தினார். இதன் பிறகு ஆட்சி நன்கு நடந்தது.

கிருஷ்ணரும் பலராமரும் வளர்ந்து பெரியவர்கள் ஆனார்கள். பல ராட்சஸர்களையும் கொடியவர்களையும் கிருஷ்ணர் ஒழித்தார். கடலின் நடுவே துவாரகாபுரியை அமைத்து கிருஷ்ணர் தன் தமையன் பலராமனை யாதவர்களின் தலைவனாக்கி ஆட்சி புரிந்து வந்தார்.

ருக்மிணியை கிருஷ்ணர் கவர்ந்து

வந்து மணம் புரிந்து கொண்டார். சகல ஐஸ்வரியங்களை அடைந்தும் கிருஷ்ணர் எப்போதும்போல மாடு களை மேய்த்து கோபாலகிருஷ்ண னாக துவாரகையிலேயே இருந்து வந்தார்.

துவாரகைக்குச் சமீபத்தில் சத் திராஜித் என்பவன் தன் நாட்டை ஆண்டு வந்தான். அவனுக்குத் தான் சூரிய வம்சத்தில் பிறந்தவன் என்ற கர்வம் ஓங்கி இருந்தது. அவன் சூரியனைக் குறித்து தவம் செய்து அவரிடமிருந்து சியமந்தகமணி என்ற விலைமதிப்பற்ற வைரத்தைப் பெற் றான். அந்த மணியிலிருந்து வெளி வரும் கிரணங்கள் தங்கக் கட்டிகளாகி சத்திராஜித்தைப் பெரும் பணக் காரனாக ஆக்கிவிட்டது.



சத்திராஜித் பல பிரமுகர்களை அழைத்துத் தன் சியமந்தகமணி யைக் காட்டிப் பெருமைப்பட்டுக் கொண்டு வந்தான். கிருஷ்ணரையும் அவன் அழைத்தான். ஆனால் கிருஷ் ணர் செல்லவில்லை. தனக்கு ஓய்வு கிடைக்கும்போது வருவதாக அவர் சத்திராஜித்திற்குத் தகவல் சொல்லி அனுப்பினார்.

தன்னைக் கிருஷ்ணர் மதிக்க வில்லை என்று சத்திராஜித் கோபம் கொண்டான். அவரைத் தன் எதிரி யாகக் கருதினான். அதனால் கிருஷ் ணருக்கு அவன் சிறப்பு மரியாதைகள் எதையும் செய்யாது இருந்தான். சத்திராஜித்திற்கு சத்தியபாமா என்ற அழகான மகள் இருந்தாள். இதனால் சத்திராஜித்தின் பெயர் மேலும் பிரபலமாகியது. பல மன்னர்கள் சத்தியபாமாவை மணக்கப் போட்டி போடலாயினர். அவர்களில் ஜரா சந்தனும் ஒருவன்.

சத்தியபாமாவிற்கு விநாயகரின் மீது அளவு கடந்த பக்தி. அவள் ஒவ்வொரு ஆண்டிலும் விநாயக சதுர்த்தியின்போதும் சிறந்த முறை யில் பூஜித்து ஸ்ரீகிருஷ்ணரே தனக்குக் கணவராகக் கிடைக்க வேண்டும் எனப் பிரார்த்தித்து வந்தாள்.

சத்திராஜித் தன் மகளின் விருப் பத்தை அறிந்து கொண்டும் ஒன்றும் தெரியாதவன் போல இருந்தான். ஒருநாள் வழக்கம்போல சத்தியபாமா விநாயகரிடம் வேண்டிக் கொண் டிருக்கும்போது அவன் வந்து ''இந்த விநாயகரால் என்ன செய்ய முடியும்? நம் வம்ச தேவனாகிய சூரிய பக வானை வழிபடு,'' என்றான்.



கொண்டு பல்லைக் கடித்தவாறே நின்றான். அப்போது சத்தியபாமா தன் தந்தையிடம் ''அப்பா! ஏன் இப்படித் திகைத்து நிற்கிறீர்கள்? கிருஷ்ணர் உங்களிடம் என்னைத் தனக்குத் திருமணம் செய்து கொடுக்குமாறு வேண்டினாரா?'' என்று கேட்டாள். சத்திரஜித்தோ ''அவன் உன்னை விரும்பவில்லை. என் சியமந்தகமணியைத் தான் விரும்புகிறான், தெரியுமா?'' என்றான்.

அப்போது சத்தியபாமா, ''உங்களுக்கு என்னைவிட அந்த சியமந்தகமணிதான் உயர்ந்ததாகப் படுகிறதா?'' எனக் கூறியவாறே அங்கிருந்து செல்லலானாள். அப்போது சத்திராஜித் ''இல்லையம்மா. அந்தக் கிருஷ்ணனின் பேராசை எவ்வளவு என்பதைத் தான் சுட்டிக் காட்டினேன்,'' என்றான்.

அதற்கு சத்தியபாமா ''அவர் ஒன்றும் இதுபோன்ற மணி தன்னிடமே தான் இருக்க வேண்டும் என்று நினைத்து பத்திரப்படுத்தி வைக்கவில்லையே. அவர் இந்த மணியை விரும்பி இருந்தால் நீங்கள் பெரிய மனிதத் தன்மையோடு அவருக்கே கொடுத்திருக்கலாமே!'' என்றாள்.

சத்திராஜித்தோ ''இந்த சியமந்தக மணியைக் கொடுப்பதா? ஊஹூம். ஒருக்காலும் முடியாது. இதை யாரும் என்னிடமிருந்து பெறவும் முடியாது. எடுத்துச் செல்லவும் விடமாட்டேன்,'' என்றான்.

சில நாட்களுக்குப் பின் விநாயக சதுர்த்தி வந்தது. மேகம் சூழ்ந்து

அதற்கு சத்தியபாமா ''இல்லை, இல்லை. நம் விருப்பங்களை எல்லாம் நிறைவேற்றி வைப்பவர் விநாயகர்தாம். என் விருப்பம் நிறைவேற அவர் அருள் புரிவார். நான் விரும்புகிறபடி கிருஷ்ணரையே என் கணவராகச் செய்வார்,'' என்றாள். சத்திராஜித்தோ கோபத்தால் முகம் சிவக்க பதில் எதுவும் சொல்லாமல் அங்கிருந்து சென்றான்.

இந்த சம்பவம் நிகழ்ந்த மறுநாளே கிருஷ்ணர் சத்திராஜித்தைக் காண வந்தார். சத்திராஜித்தும் தன் வீடு தேடி வந்த கிருஷ்ணரைத் தன் தர்பாரில் காண ஏற்பாடு செய்து அங்கு சென்றான். அப்போது கிருஷ்ணர் திடீரென்று அங்கிருந்து மாயமாகி மறைந்துவிட்டார்.

சத்திராஜித் கோபத்தோடு தன் சியமந்தகமணியை இறுகப் பற்றிக்

இருள் கவ்வியது. கிருஷ்ணர் அப் போது பாலைக் கறந்து பார்க்க அவருக்கு அதில் நாலாம் பிறை தென்பட்டது. அப்போது அவர் ''அடாடா! நாலாம் பிறையைப் பார்த்தால் நாய்படும் பாடு பட வேண்டும் என்பார்களே!'' என எண்ணி பூஜை அறைக்குப் போய் விநாயகர் முன் நின்று ''விநாயகா! உன் பரிபூரண அருள் எனக்கு வேண்டும்,'' என வேண்டினார்.

அப்போது விநாயகர் ''கிருஷ்ணா! நீ நாலாம் பிறையை நேரடியாக வேண்டுமென்றே பார்க்கவில் லையே. அதன் பிரதி பிம்பத்தையே பார்த்தாய். எல்லாம் நல்லபடியா கவே முடியும்,'' என்று கூறினார். அதுகேட்டு கிருஷ்ணர் ''எல்லாம் உன் தயை தான்,'' எனக் கூறி வணங்கினார்.

அதே சமயம் பூஜை அறைக்குள் வந்த ருக்மிணி கிருஷ்ணர் விநா யகரின் முன் கைகூப்பி நிற்பது கண்டு ஆச்சரியப்பட்டு ''இதென்ன நீங்கள் விநாயகர் முன் நின்று ஏதோ வேண்டிக் கொள்கிறீர்களே!'' என்று கேட்டாள்.

கிருஷ்ணரும் ''இன்று விநாயக சதுர்த்தி. என் தாயார் யசோதை ஒரு விநாயக சதுர்த்தியன்று கூறிய விஷயம் நினைவிற்கு வந்தது. அத னால் தான் இப்படிச் செய்தேன்,'' என்றார்.

ருக்மிணியும் ''அப்படியா? உங் கள் தாயார் என்ன சொன்னார்கள்? நானும் கேட்டுப் பயன் அடை கிறேன்,'' என்றாள்.

''என் தாயார் என்னைப் போலப் பாலைக் கறந்தபோது அதில் விநா யக சதுர்த்தி நாளின் சந்திர பிம் பத்தைப் பார்த்தேன். அப்போது சதுர்த்தி சந்திரனைப் பார்த்ததால்



பலவித வசவுகளுக்கு ஆளாக வேண்டி வருமே என்று கூறி அவள் வருத்தப்படலானாள். அப்போது நான் இனிமேல் விநாயக சதுர்த்தி யன்று சந்திரனைப் பார்க்கமாட்டேன் என்று கூறி அவளைத் தேற்றினேன்,'' என்றார்.

ருக்மிணியும் ''ஓகோ! அப்படி யானால் கொடுத்த வாக்கைக் காப் பாற்ற முடியவில்லையா? ஆனால் இப்போது சந்திரனை மேகம் சூழ்ந் திருக்கிறதே. எப்படிப் பார்க்க முடி யும்?'' என்றாள்.

கிருஷ்ணரும் ''இது கிடக்கட்டும். நீ இங்கே வந்த காரணத்தைச் சொல்லவில்லையே. என்னிடம் என்ன சொல்ல வந்தாய்? அதை முதலில் சொல்!'' என்று கேட்டார். ருக்மிணியும் ''சத்திராஜித்திடம் இருந்த மணி நம் வீட்டிற்கு வந்து விட்டது,'' என்றாள்.

கிருஷ்ணரும் ''சியமந்தகமணி இங்கே வந்துவிட்டதா? எப்படி வந் தது?'' என்று கேட்டார் ஆச்சரியப் பட்டவாறே. ருக்மிணி சிரித்தவாறே ''சியமந்தகமணி வரவில்லை. சத் திராஜித்திடமுள்ள மற்றொரு மணி யான சத்தியபாமா என்ற மணி வந்திருக்கிறது. அவளும் நானும் வெகுநேரம் வரை பேசிக் கொண் டிருந்தோம். இப்போதுதான் கிளம் பிப் போனாள். அவளை வழி அனுப்பிவிட்டு நேராக இங்கே வந்திருக்கிறேன்,'' என்றாள்.

கிருஷ்ணனும் ''ஓ! அப்படியா! இங்கு அவள் நம் விநாயகரைப் பார்க்கலாம் என்று வந்திருந்தாள் போலிருக்கிறது. விநாயகரைப் பார்த் தாளா?'' என்று கேட்டார்.

ருக்மிணியும் ''அவர் விநாயக ரைப் பார்க்க வந்தாளா என்று எனக் குத் தெரியாது. அவள் கண்கள் சுழன்றதைப் பார்த்தால் உங்களைத் தான் தேடினாள் என்பது தெரிந்தது,'' என்றாள்.

கிருஷ்ணரும் ''ஆ! எவ்வளவு கெட்டிக்காரி நீ! எப்படி எல்லாம் பேசுகிறாய்!'' என்று சிரித்துக் கொண்டே அவளிடம் கூறினார்.

*(தொடரும்)*





# பொதுநலமே குறி!



மேலூர் என்ற ஊரில் முத்து என்ற இளைஞன் இருந்தான். சிறு வயதில் அவன் தன் பெற்றோர்களை இழந்து விட்டான். அதனால் அவனை அவனது பாட்டி செல்லமாக வளர்த்து வந்தாள். இக்காரணத்தால் அவன் ஒரு வேலையும் செய்யாமல் சோம்பேறியாகத் திரியலானான்.

அவனது பாட்டியோ சில வீடுகளில் எடுபிடி வேலைக்ளைச் செய்து கிடைக்கும் பணத்தில் எப்படியோ தன பேரனுக்கு உணவு அளித்து தானும் உண்டு காலம் கழித்து வந்தாள்.

ஒருநாள் அக்கிழவி காய்ச்சலில் படுத்துவிடவே, அவள் தன் பேரனை அழைத்து, ''முத்து! இன்று நீ காட்டிற்குப் போய் விறகு வெட்டி அதை விற்றுப் பணம் கொண்டு வா. இன்று என்னால் எதுவும் செய்ய முடியவில்லை,'' என்று கூறினாள். முத்துவும் வேண்டாவெறுப்பாக முனகிக் கொண்டே கோடாலியை எடுத்துக் கொண்டு காட்டிற்குச் சென்றான்.

அங்கு ஒரு மரத்தைக் கண்டு அதை வெட்டப் போனபோது அதன் அடி மரத்தை 'பளபள'வெனப் பிரகாசிக்கும் ஒரு கொடி சுற்றிக் கொண்டிருப்பதைக் கண்டான். அதுபற்றித் தன் பாட்டியிடம் கேட்கலாம் என்று எண்ணி அவன் அதை அறுத்துத் தன் இடுப்பில் சுற்றிக் கொண்டான். பிறகு விறகை வெட்டி சுமையாகக் கட்டி எடுத்துத் தலை மீது வைத்துக் கொண்டு அவன் தன் வீட்டிற்குப் புறப்பட்டான்.

வழியில் ஒரு பெண் விழுந்து கிடப்பதையும் அவளருகே ஒருவர் உட்கார்ந்து கண்ணீர் உகுத்துக் கொண்டிருப்பதையும் அவன் கண்டான்.

- சிவனார் செல்வன் -



அவரருகே சென்று என்ன விஷயம் என்று அவன் விசாரித்தான். அவரும் தன்னைப் பற்றிக் கூறலானார்.

''என் பெயர் பரமசிவம். நான் ஒரு வைத்தியன். என்னிடம் சிகிச்சை பெற பல ஊர்களிலிருந்து மக்கள் வருகிறார்கள். அதற்குக் காரணம் அவர்களது ஊர்களில் மருத்துவ மனைகள் இல்லாமையே. எனவே மன்னரைக் கண்டு நான்கைந்து ஊர்களுக்கு ஒரு மருத்துவமனை வீதம் கட்டித் தருமாறு அவரிடம் வேண்டிக் கொள்ளலாம் என்று நான் எண்ணினேன்.

அப்போது ஒரு யோகீஸ்வரர் என் வீட்டிற்கு வந்தார். அவரிடம் நான் என் திட்டத்தைக் கூறினேன். அதைக் கேட்டு அவர் 'மிக அருமையான திட்டம் இது. பொது நலன் கருதி இதைச் செய்வதால் உங்களுக்கு உதவுகிறேன். இன்னும் இரண்டு நாட்களில் இந்நாட்டு மன்னரின் பிறந்த நாள் விமரிசையாகக் கொண் டாடப்பட இருக்கிறது. அச்சமயத் தில் நீங்கள் அவருக்கு விலை உயர்ந்த பரிசு ஒன்றை அளித்து உங்கள் கோரிக்கையைத் தெரிவியுங்கள். மன்னர் கண்டிப்பாக ஏற்று உங்கள் திட்டத்தை நடைமுறையில் கொண்டு வருவார். விலையுயர்ந்த பரிசு பற்றிக் கவலைப்படாதீர்கள். நான் ஒரு மந்திரத்தை உபதேசிக் கிறேன். நீங்கள் ஒரு சாதாரணக் கல்லைக் கையில் எடுத்துக் கொண்டு அந்த மந்திரத்தை உச்சரித்தால் அது விலையுயர்ந்த வைரமாக மாறி விடும். அதை நீங்கள் மன்னரிடம் கொடுங்கள். நானும் அச்சமயம் தர்பாருக்கு வந்து உங்களுடன் இருப்பேன்,' என்று கூறி மந்திரத்தை உபதேசித்தார்.

அதன் பிறகு அவர் சென்று விடவே, நானும் என் மனைவியும் மன்னரைக் காண வீட்டிலிருந்து புறப்பட்டு வந்தோம். ஆனால் வழியில் இங்கே என் மனைவியை ஒரு பாம்பு தீண்டிவிட்டது. எனக்கு அந்த விஷத்தை இறக்கத் தெரியும். அதற்கான பச்சிலை என்னிடம் இல்லையே!'' என்று கூறியவாறே முத்துவைப் பார்த்தார்.

அவனது இடுப்பில் சுற்றப்பட் டிருந்த கொடியைக் கண்டு அவர் மகிழ்ந்துபோய், ''ஆஹா! அந்தப் பச்சிலை உன் இடுப்பைச்சுற்றியுள்ள

கொடியில் இருக்கிறது. அதைக் கொடுத்தால் ஓர் உயிரைக் காப்பாற்றிய புண்ணியம் கிடைக்கும்,'' என்றார்.

முத்து சற்று யோசித்து ''எனக்குப் புண்ணியம் வேண்டாம். பணம் தான் வேண்டும். இந்தப் பச்சிலைகளை உங்களுக்குக் கொடுப்பதால் எனக்கு என்ன ஆதாயம்? இப்போதே ஒரு கல்லை எடுத்து யோகீஸ்வரர் உபதேசித்த மந்திரத்தால் வைரமாக மாற்றி என்னிடம் கொடுங்கள். அதை மன்னரிடம் கொடுத்துப் பரிசைப் பெறுகிறேன். கிடைக்கும் பரிசுத் தொகையில் பாதியை உங்களுக்குக் கொடுக்கிறேன். இதற்கு சம்மதமா? முதலில் கல்லை மாற்றி வைரத்தைக் கொடுங்கள். பிறகே பச்சிலையைக் கொடுப்பேன்,'' என்றான்.

பரமசிவமும் தன் மனைவியைப் பிழைக்க வைப்பதற்காக முத்து விதித்த நிபந்தனைகளை ஏற்றார். அவர் ஒரு கல்லை எடுத்து மந்திரத்தை உச்சரித்து அதை வைரமாக ஆக்கி முத்துவிடம் கொடுத்த பிறகே முத்து தன் இடுப்பில் சுற்றி இருந்த பச்சிலைக் கொடியைக் கழற்றி பரமசிவத்திடம் கொடுத்தான். அவரும் அந்தப் பச்சிலைகளைக் கொண்டு தம் மனைவியின் உடலிலிருந்த பாம்பின் விஷத்தைப் போக்கினார். அதன் பிறகு பரமசிவமும் அவரது மனைவியும் முத்துவும் தலைநகருக்குச் சென்று ராஜதர்பாரை அடைந்தார்கள்.

அப்போது முத்து அவர்களைப் பிரிந்து பரமசிவத்தை அறியாதவன்



போல நடந்தான். அவனது நோக்கம் பரிசுத் தொகையில் பரமசிவத்திற்குப் பங்கு கொடுக்கக் கூடாது என்பதே.

அதைப் புரிந்து கொண்ட பரமசிவம் தர்பாருக்கு வந்த யோகீஸ்வரரைக் கண்டு நடந்ததைக் கூறித் தம் நோக்கம் நிறைவேறாமல் போவது குறித்து வருத்தப்பட்டார். யோகீஸ்வரரும், ''கவலைப்படாதீர்கள். எல்லாம் நல்லதே நடக்கும்,'' எனக் கூறினார்.

பிறந்தநாள் பரிசுகளை மன்னருக்குக் கொடுக்க எல்லோரும் வரிசையில் சென்றார்கள். முத்துவும் வைரத்தோடு அந்த வரிசையில் சென்றான். மன்னரை அணுகியதும் அவன் பெருமையுடன் வைரத்தை மன்னரிடம் கொடுத்தான். ஆனால் மன்னர் அதை வாங்கியபோது அது கல்லாக மாறவே

அதை அவர் கீழே போட்டார். அது அவரது காலில் பட்டு காயப்படுத்தியது. அதனால் கோபம் கொண்டு அவர் தம் வீரர்களிடம் முத்துவைப் பிடித்துக் கொண்டு போய் சிறையில் தள்ளுமாறு கட்டளை இட்டார்.

முத்து திகைத்து நின்றான். அப்போது யோகீஸ்வரர் பரமசிவத்தை அழைத்துக் கொண்டு வந்து மன்னர் முன் நின்றார். அவர் காலடியில் கிடந்த கல்லை எடுத்து பரம சிவத்தின் கையில் வைத்தார். அது வைரமாக மாறிப் பிரகாசித்தது. பரம சிவம் அந்த வைரத்தை மன்னரிடம் கொடுக்க அதை அவர் ஏற்றார்.

அப்போது யோகீஸ்வரர் நடந்ததைக் கூறி, ''இவர் ஒரு வைத்தியர். பல கிராமங்களில் மருத்துவமனைகளை நிறுவி மக்களுக்கு நன்மை புரியுமாறு வேண்டவே இவர் வந்து கொண்டிருந்தார். வழியில் இவரது மனைவியைப் பாம்பு தீண்டி விட்டது. அதன் விஷத்தைப் போக்கும் பச்சிலை அப்போது அங்கு வந்த இந்த முத்துவிடம் இருந்திருக்கிறது. ஆனால் அதைக் கொடுக்க இவன் பேரம் பேசினான். உயிருக்குப் போராடிக் கொண்டிருக்கும் ஒருவரைக் காப்பாற்ற பணம் கேட்டான். அது மட்டுமல்லாமல் பேசியபடி நடக்காமல் பரமசிவத்தை ஏமாற்ற முயன்றான்.

பரமசிவமோ பல மருத்துவமனைகளைக் கட்டி தாங்கள் மக்களுக்கு உதவ வேண்டும் என தங்களிடம் வேண்டிக் கொள்ளவே வந்தார். இவரது குறி பொதுநலமே. எனவே இவரது கோரிக்கையை ஏற்றுக் கொள்ளுங்கள்,'' என்றார்.

மன்னரும் ''இது என் கடமை. இப்போதே ஐந்து கிராமங்களுக்கு ஒரு மருத்துவமனை வீதம் கட்ட உத்தரவு போடுகிறேன். இந்த மருத்துவமனைகள் எல்லாம் பரமசிவத் தின் மேற்பார்வையில் இருக்கும். முத்து ஆறு மாதம் சிறையில் இருக் கட்டும். பிறகு அவனுக்கு ஏதாவது ஒரு வேலை போட்டுக் கொடுக்கிறேன்,'' என்றார்.

யோகீஸ்வரரும் மகிழ்ந்து போய் மன்னரையும் மற்றவர்களையும் ஆசீர்வதித்துவிட்டுச் சென்றார்.





# யார் தகுந்தவன்?

கந்தனூரில் கந்தநாதன் என்பவர் பணக்கார வியாபாரி. அவர் தமக்கு வயதாகிவிட்டதால் தம் வியாபாரத்தைத் தொடர்ந்து நடத்தும் பொறுப்பைத் தம் மூன்று மகன்களில் யாரிடம் ஒப்படைப்பது என்று யோசித்தார். அதற்கு ஒரு வழியும் அவருக்குத் தோன்றியது.

அதன்படி அவர் தம் மூன்று மகன்களையும் அழைத்து ''எனக்கோ வயதாகிவிட்டது. உங்கள் மூவரில் ஒருவனிடம் என் வியாபாரத்தை ஒப்படைக்க நினைக்கிறேன். அந்தப் பொறுப்பை ஏற்கத் தகுந்தவன் யார் என்பதை அறிய உங்களுக்கு ஒரு சிறு பரீட்சை வைக்கப் போகிறேன். அதன் முடிவைக் கண்டே என் வியாபாரத்தையும் சொத்துக்களையும் நிர்வகிக்கும் பொறுப்பை அவனிடம் ஒப்படைப்பேன்,'' என்றார். அதுகேட்டு மூன்று மகன்களும் தம் சம்மதத்தைத் தெரிவித்தார்கள்.

அப்போது கந்தநாதன் தம் சட்டைப் பையிலிருந்து மூன்று ரூபாய் நாணயங்களை எடுத்து அவர்கள் ஒவ்வொருவரிடமும் ஒரு ரூபாய் வீதம் கொடுத்தார். பிறகு அவர் ''உங்களிடம் உள்ள ஒரு ரூபாயைக் கொண்டு இன்று மாலைக்குள் ஒரு நல்ல வேலையைச் செய்துவிட்டு வர வேண்டும்,'' என்று கூறி அவர்களை அனுப்பினார்.

மாலைப் பொழுது வந்தது. கந்தநாதனின் மூன்று மகன்களும் வந்துவிட்டார்கள். அவரும் தன் மூத்த மகனைத் தம் அருகே அழைத்து, ''நான் கொடுத்த ஒரு ரூபாயைக் கொண்டு என்ன நல்ல வேலையைச்

- எஸ். சங்கரராம் -

செய்தாய்?'' என்று கேட்டார். அவனும், ''நம் ஊர்க் கோயில் வாசலில் ஒரு கிழவி பசியால் துடிதுடிப்பதைக் கண்டேன். நீங்கள் கொடுத்த ஒரு ரூபாயை அவளுக்குக் கொடுத்து ஏதாவது வாங்கிச் சாப்பிடச் சொன்னேன்,'' என்றான்.

அடுத்து அவர் தம் இரண்டாவது மகனை அழைக்கவே, அவனும் ''நான் நம்மூர் கோயிலுக்குள் போய் அர்ச்சகரிடம் நம் வியாபாரம் நன்கு நடைபெற அர்ச்சனை செய்யுமாறு கூறினேன். நான் நீங்கள் கொடுத்த ஒரு ரூபாயை அந்த அர்ச்சகருக்குக் கொடுத்தேன்,'' என்றான்.

கந்தநாதன் தம் மூன்றாவது மகனைப் பார்க்க, அவனோ ஒரு ரூபாயை எடுத்து அவரிடம் கொடுத்தான். அவரும், ''என்ன இது? நான் கொடுத்த ஒரு ரூபாயை நீ எவ்விதத்திலும் செலவு செய்யவில்லையா?'' என்று கேட்டார்.

அவனும் ''பணத்தை வீணாகச் செலவு செய்வதை நீங்கள் விரும்பமாட்டீர்கள் என்பதை நான் அறிவேன். ஆனாலும் ஒரு ரூபாயைச் செலவழித்து ஒரு நல்ல வேலையைச் செய்தேன்,'' என அதைக் கேட்டு கந்தநாதன் திகைத்துப் போனார்.

அப்போது அவன், ''ஆச்சரியப்படுகிறீர்களா? நீங்கள் கொடுத்த ஒரு ரூபாயில் மூன்று பூசணிக் காய்களை வாங்கி, அவற்றை வேறொரு இடத்தில் மிக அருமையான பூசணிகள் எனக் கூறி இரண்டு ரூபாய்க்கு விற்றேன். அதில் ஒரு ரூபாயை எடுத்து அரை ரூபாய்க்குத் தயிர்சாதம் வாங்கி பசியால் வாடும் ஒரு சிறுவனுக்குக் கொடுத்து அவனது பசியைப் போக்கினேன். மீத அரை ரூபாயைக் கோயில் உண்டியலில் போட்டேன். இப்படி ஒரு ரூபாயில் நல்ல வேலையைச் செய்து மீத ஒரு ரூபாயைக் கொண்டு வந்திருக்கிறேன்,'' என்றான்.

தன் மூன்றாவது மகனின் வியாபார சாமர்த்தியத்தையும் சேமித்து வைக்கும் குணத்தைக் கண்டு கந்தநாதன் மகிழ்ந்து அவனிடமே தம் வியாபாரத்தையும் சொத்துக்களையும் ஒப்படைத்தார்.





# அறிவை அனுப்பினான்!

சுந்தரபுரியின் சிம்மாசனத்தில் அமர்ந்த சுந்தரவர்மன் இளைஞன் ஆனால் நல்ல அறிவாளி. எல்லாக் கலைகளையும் கற்றவன். அவ னுக்கு ஆட்சியில் உதவ அனுபவமிக்க அமைச்சர்களும் பண்டிதர்களும் இருந்தார்கள்.

சுந்தரபுரியின் அண்டை நாடான மந்தரகிரி மிகப் பெரியது. அதன் மன்னனான மங்களசேனன் வெகு நாட்களாகவே சுந்தரபுரியை வென்று தன் நாட்டோடு இணைத்துக் கொண்டுவிட வேண்டும் என்று ஆசை கொண்டிருந்தான். ஆனால் சுந்தரவர்மனின் தந்தை உயிருடன் இருந்தவரை அது நிறைவேற வில்லை. இப்போது ஆட்சி அனு பவம் இல்லாத சுந்தரவர்மனை எளிதில் வென்றுவிடலாம் என்று மங்களசேனன் மனப்பால் குடித்தான்.

ஒருநாள் மங்களசேனன் தன் அமைச்சர்களையும் படைத் தலை வர்களையும் கூட்டித் தன் எண் ணத்தைக் கூறினான். அவர்களும் ''நீங்கள் கூறுவது மிகவும் சரியே. சுந்தரவர்மன் அனுபவசாலி அல்ல. ஆனாலும் அறிவு மிக்கவன். நாம் எப்போதும் நம் எதிரியைக் குறை வாக மதிப்பிடக் கூடாது. சுந்தர வர்மனின் அறிவைப் பரீட்சித்து விட்டு படையெடுப்பை நடத்த லாம்,'' என்றார்கள்.

அவர்கள் அப்போதே யோசித்து மங்களசேனனிடம், ''நாம் ஒரு கடி தத்தை சுந்தரவர்மனுக்கு அனுப்பு வோம். அதில் உங்கள் நாட்டிலிருந்து கொஞ்சம் அறிவை எங்களுக்கு அனுப்புங்கள் என்று எழுதுவோம். அதற்கு என்ன பதில் வருகிறது என்று பார்ப்போம்,'' என்றார்கள்.

மங்களசேனனின் தூதன் சுந்தர புரிக்குச் சென்று அந்தக் கடிதத்தை சுந்தரவர்மனிடம் நிறை தர்பாரில் கொடுத்தான். அதைப் படித்த சுந்தர



எழுதி மங்களசேனனுக்கு அனுப்பி வைத்தான்.

நான்கு மாதங்களானதும் ஞான சேகரன் ஒரு மூட்டையுடன் வந்து சுந்தரவர்மனைக் கண்டான். அவனிடம் ஞானசாகரன், ''இந்த மூட்டையில் அறிவு இருக்கிறது. இதை பத்திரமாக மங்களசேன மன்னனுக்கு அனுப்புங்கள்,'' என்றான். சுந்தரவர்மனும் அவனிடம் அம்மூட்டையைப் பற்றி எதுவும் கேட்காமல் அதை அப்படியே மங்களசேனனுக்கு அனுப்பி வைத்தான்.

தர்பாரில் மங்களசேனனும் அவனது அமைச்சர்களும் அந்த மூட்டையைப் பிரித்துப் பார்த்தார்கள். அதில் குறுகிய வாய் கொண்ட ஒரு பானை இருந்தது. அதற்குள் பெரிய பூசணிக்காய் இருந்தது. அது சரியாய் பானையோடு ஒட்டி இருந்தது. அதன் காம்பு மாத்திரம் பானையின் வாய்க்கு வெளியே நீட்டிக் கொண்டிருந்தது. பானை உடையாமல் முழுசாக இருந்தது. பானை புதிதாக இருப்பது கண்டு எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள்.

அந்தப் பானை மீது ஒரு கடிதம் இருப்பது கண்டு அதை மங்கள சேனன் எடுத்துப் படித்தான். அதில் 'மங்களசேனர் கேட்டுக் கொண்டபடி அறிவை அனுப்பி இருக்கிறேன். பானைக்குள் அறிவு உள்ளது. நீங்கள் பானையை உடைக்காமல் அறிவை எடுத்துக் கொள்ளுங்கள். இது கிடைத்ததற்கு ஒரு கடிதம் எழுதி அனுப்புங்கள்,' என்று இருந்தது.

வர்மன் அதைத் தன் அமைச்சர்களிடம் காட்டினான். அவர்கள் அதைப் படித்து ஆச்சரியப்பட்டார்கள். ஏதாவது பொருள் என்றால் அனுப்பிவிடலாம். ஆனால் அறிவை அனுப்பச் சொல்கிறார்களே, அது எப்படி முடியும்?

அப்போது அமைச்சர்களில் வயதில் மிகவும் குறைந்த ஞானசாகரன் ''அரசே! எனக்கு நான்கு மாத அவகாசம் கொடுங்கள். மங்களசேன மன்னர் கேட்டபடி நான் அறிவை இங்கிருந்து அனுப்புகிறேன். ஆனால் இதுபற்றி யாரும் என்னிடம் நான்கு மாதங்கள் முடியும்வரை எதுவும் கேட்கக் கூடாது,'' என்றான்.

அதன்படியே மன்னன் சுந்தரவர்மனும் நான்கு மாதத்திற்குள் அறிவை அனுப்பி வைப்பதாகக் கடிதம்

இதை மன்னன் படித்து முடித்ததும் யாவரும் ஒருவரை மற்றவர் பார்க்கலானார்கள். எல்லோருமே அவ்வளவு சிறிய வாய் கொண்ட பானைக்குள் பெரிய பூசணிக்காய் எப்படி நுழைந்தது என்று ஆச்சரியப்பட்டார்கள். பானை உடையாமல் பூசணிக்காயை எடுக்க வேண்டுமாம். முடியவே முடியாதே!

அப்போது மங்களசேனன், "நாம் எல்லோரும் நினைத்ததுபோல சுந்தரவர்மன் அறிவற்றவன் அல்ல. நல்ல அறிவாளி. எனவே இனியும் சுந்தரவர்மனுடன் பகைமை கொள்ளாமல் அவனோடு நாம் நட்புறவு கொள்வோம்," என்றான்.

பிறகு அவன் சுந்தரவர்மனுக்கு எழுதிய கடிதத்தில் 'நீங்கள் அனுப்பியது கிடைத்தது. அதற்காக உங்களைப் புகழ்ந்தே ஆக வேண்டும். நான் உங்களது நட்பையே என்றென்றும் கோருகிறேன்," என்று எழுதப்பட்டிருந்தது.

அக்கடிதத்தைப் படித்த சுந்தரவர்மன் மிகவும் மகிழ்ச்சி அடைந்தான். ஆனால் மங்களசேனன் அறிவு வந்து சேர்ந்ததாகக் கூறி திருப்தி அடைந்தானே, அது எப்படி என்றறிய சுந்தரவர்மன் ஞானசாகரனை அழைத்துத் தன் சந்தேகத்தைக் கூறினான்.

ஞானசாகரனும், "இது சர்வ சாதாரண விஷயம். நான் நான்கு மாதங்களுக்கு முன் ஒரு பூசணி விதையை நட்டு கொடிவரச் செய்தேன். அது பிஞ்சு விட்டதும் ஒரு புதுப்பானைக்குள் நுழைத்து பெரிதாக வளரச் செய்தேன். பானையின் வாய் சிறியதானாலும் அதற்குள் வளர்ந்த காய் பெரிதே. பூசணிக்காய் உள்ள பானையை மூட்டையாகக் கட்டி அனுப்பினேன். பானையை உடைக்காமல் பூசணிக்காயை எடுக்கச் சொல்லி அதில் ஒரு கடிதம் வைத்திருந்தேன். அதுதான் அவர் கேட்ட 'அறிவு'. அதற்கு பதிலைத் தான் நீங்கள் பெற்றீர்களே!" என்றான். அதைக் கேட்டு ஞானசாகரனை சுந்தரவர்மன் மிகவும் பாராட்டினான்.




Chandamama presents
வீர தீர பராக்கிரமன் 22
ஓவியம் : பாணி
ஆதித்தன் மகேந்திரவர்ம மன்னரின் ஆசி பெற்று வீரர்களுடன் தாந்திரீகன் நாகபந்துவை அடக்கி ஒடுக்க சர்ப்பதேசத்திற்குப் புறப்பட்டான். தாந்திரீகனின் குகைக் கோயிலருகே கூடாரங்கள் போட்டுத் தங்கிய ஆதித்தனின் வீரர்கள் மலைச் சாதி தம்பதிகள் இருவரை சிறைப்படுத்தி இழுத்து வந்தார்கள். அவர்கள் தாந்திரீகனின் ஆட்களிடம் அகப்படாமல் தப்பி வந்தவர்கள். தாந்திரீகன் தேடுவது என்னைத் தான் என்று ஆதித்தன் அவர்களிடம் கூறினான்.


மலைச்சாதி தம்பதிகள் அதைக் கேட்டு ஆச்சரியம் அடைந்தார்கள். அந்த இளம்பெண் தாந்திரீகனின் சக்தி பற்றி விவரமாகக் கூறினாள். மேலும் ஆதித்தனின் வீரச் செயல்கள் பற்றி நரேந்திரதேவனின் ஆட்கள் கூற அறிந்திருப்பதாகவும் அவனிடம் சொன்னாள்.


நரேந்திர தேவனும் அவனது மகனும் நாகபந்துவின் விருந்தாளிகளாக இருக்கிறார்கள். சேனாதிபதியின் சில வீரர்கள் உங்களைச் சிறைப் பிடிக்க வந்து கொண்டு இருக்கிறார்கள்.
நரேந்திரதேவன் இப்போது எங்குள்ளான்? அவனது ஆட்கள் எவ்வளவு பேர்?


அவர்கள் இரவில் புறப்பட்டார்கள் என்று நினைக்கிறேன்.
சில வீரர்கள் படகுகளில் ஏறி ஆற்றைக் கடந்து கரையை அடையக் கூடும்.
அப்படியானால் நம் வீரர்கள் அவர்களுக்கு முன் அங்கே போய்ச் சேர வேண்டும்.


ஆதித்தன் தன் கூடாரத்தில் திட்டம் தீட்டினான்.
அவர்களுக்கு முன் செல்ல வேண்டுமென்றால் ஏதாவது ரகசிய வழியில் செல்ல வேண்டும்.
நம் வீரர்களுக்கு மலைச் சாதி தம்பதிகள் வழி காட்டுவார்கள்.
யார் அங்கே?


சில மலைவாசிகள் ஆதித்தனிடம் தம் துயரக் கதைகளைக் கூறினர்.
தாந்திரீகனின் ஆட்டங்களை நான் முறியடிக்கிறேன். பயப்படாதீர்கள்!
நாகபந்துவை ஒடுக்க உங்களது ஒத்துழைப்பு எனக்குத் தேவை.
நாங்கள் உங்களை ஹோமம் நடக்கும் ஆலயத்தின் பக்கத்தில் கொண்டு போய் விட்டு விடுகிறோம்.

மலைவாசிகள் மகிழ்ந்தனர்.

நீங்கள் போய் தீயை வளர்த்து அதைச் சுற்றி நடனம் ஆடுங்கள்! அந்த சத்தம் கேட்டு தாந்திரீகன் வெளியே வருவான்.

இவர் நம்மைக் காப்பவர்.

நரேந்திரதேவன் தன் ஆட்களுடன் புறப்படலானான்.

நான் புறப்படு முன் தாந்திரீகர் நாகபந்துவை தரிசித்து அவரை சந்திரபுரிக்கு வருமாறு அழைக்க வேண்டும்.

ஆனால் அவன் விருப்பம் நிறைவேறவில்லை.

அவர் இளைப்பாறிக் கொண்டிருக்கிறார். அவரது தூக்கத் தைக் கலைக்கக் கூடாது. நானே அவரை சந்திரபுரிக்குக் கூட்டி வருகிறேன்.

அந்தப் பயல் கருடன் எங்கே ஒளிந்து கொண்டுள்ளான் என்று தெரிய வில்லையே!

நரேந்திரதேவனுக்கு மலைவாசிகளின் தலைவனே வழி காட்டினான்.

இப்போது நாம் எங்கு செல்கிறோம்?

மலை அருவிக்குப் போக இதுவே குறுக்கு வழி. நாம் விரைவில் அங்கு போய்விடுவோம்.


மலைச்சாதி இளம்பெண் வழி காட்ட, ஆதித்தனின் வீரர்கள் ரகசிய வழியில் சென்று மலை அடிவாரத்தை அடையலானார்கள்.


திடீரென ஆலய வாசலில் ஆட்ட பாட்ட சத்தம் கேட்டு நாகபந்து கண் விழித்தான்.
தீ மூண்டு விட்டது. ஆதித்தனை பலி கொடுத்தால் இவர்கள் மகிழ்ச்சி அடைவார்கள்.


மலை அடிவாரத்தில் ஆற்றில் நரேந்திர தேவனுக்காக அலங்கரிக்கப்பட்ட படகு இருந்தது. படகு கிளம்பும்போது...
இந்த ஆற்றில் முதலைகள் உள்ளன. ஜாக்கிரதை!
தொடரும்



# கேளிக்கை நேரம்

## ஒட்டிப் பாருங்கள்!



அடடா! யாரோ இந்த இலைப் புழுவின் உருவத்தைச் சிதைத்துப் பாழ்படுத்தி விட்டார்கள். சிதறிக் கிடப்பனவற்றை ஒட்டி நீங்கள் உதவலாமே. சதுர பாகங்களைக் கத்தரித்து ஒரு அட்டையில் ஒட்டுங்கள்.





பிறகு ஒவ்வொன்றையும் தனித்தனியாக வெட்டி எடுத்து சரியாக அமைத்து இலைப் புழு வடிவம் கிடைக்கிறதா என்று பாருங்கள். முடிவில் நீங்கள் உருவாக்கியதை மேலே கொடுக்கப்பட்டுள்ள படத்துடன் ஒப்பிட்டுப் பாருங்கள்.

# கானானில் வழி



ஜாண்டு வண்டு தன் களஞ்சியத்திற்குச் செல்ல விரும்புகிறது. அது சற்றுத் தூங்கி எழுந்ததால் போக வழி தெரியாமல் விழிக்கிறது. அது போக வேண்டிய வழிகள் களஞ்சியத்தின் கதவருகே சென்று முடிகிறது. வண்டு திகைத்து நிற்பதால் நீங்கள் அதற்கு உதவி வழி காட்டுங்கள்!

*(விடைகள் 66ம் பக்கத்தில்)*

# ஜோடி சேருங்கள்!

இங்குள்ள ஆறு உருவங்கள் உள்ளன. அவற்றில் இரண்டு மட்டும் ஒன்றுக்கு மற்றது எல்லா விதத்திலும் பொருந்தக்கூடியது. அவை எவை என்று கண்டுபிடியுங்கள் பார்க்கலாம்!





வாக்கியம் உருவாக்குங்கள்

# போட்டோ வாக்கியப் போட்டி







**இந்த போட்டோக்களுக்கு தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி அனுப்புங்கள்.**

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25ந் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/–
போட்டி முடிவு மார்ச் 2003 இதழில் வெளியிடப்படும்.
போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

## வாழ்த்துக்கள்!

நவம்பர் 2002 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :

ரெ. சிவ. அமிர்த நிவேதிதா
த/பெ. செ. ரெத்தினமணி,
27/4, கோகுலம் காலனி, காஜாமலை,
திருச்சிராப்பள்ளி - 620 023.

பரிசு பெற்ற வாக்கியங்கள்



சுகத்தின் சுமையோ தோளில்!
மலரின் மகிழ்வோ மடியில்!

கேளிக்கை நேரம் - விடை (பக்கம் 65)

ஜோடி சேருங்கள் - படங்கள் 2ம், 4ம் பொருந்துபவை.

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 600 026 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : Viswam

AMBULIMAMA (Tamil) JANUARY 2003
Regd. with Registrar of Newspaper for India No. 1095/57
Registered No. TN/CPMG-839/2002
Licensed to post without prepayment No. 545/02 /
Foreign - WPP. No. 564